

நகுமோமுதோடி ஓ நரகேஸரி
நகரூப கருடாத்ரி நரகேஸரி (பல்லவி)

அமிததானவ ஹரண ஆதிநரகேஸரி
நமித பிரம்மாதிஸுர நரகேஸரி
கமலாக்ர வாமாங்க்க கனக நரகேஸரி
நமோ நமோ பரமேஸ நரகேஸரி

ரவிசந்த்ர ஸிகனேத்ர ரௌத்ர நரகேஸரி
நவநாரஸிம்ஹ நமோ நரகேஸரி
பவநாஸினிதீர பவ்ய நரகேஸரி
நவரஸாலங்கார நரகேஸரி

சரணுகத த்ராண ஸௌம்ய நரகேஸரி
நரகமோசன நாம நரகேஸரி
ஹரி நமோ ஸ்ரீவேங்கடாத்ரி நரகேஸரி
நரஸிம்ஹா ஜெய ஜெயது நரகேஸரி

அன்னமாசார்யா பக்தி கீர்த்தனை-I 421

"புன்சிரிப்புடன் விளங்கிடும் ஓ நரசிம்மனே! கருடமலை உருவில் திகழ்ந்திடும் நரசிம்மனே!

அரக்கர்களை இரக்கமில்லாமல் அழித்திடும் ஆதிநரசிம்மனே! பிரம்மாதி முதல் பல தேவ கணங்கள் தொழுதிடும் நரசிம்மனே! தாமரையை வாசமாகக் கொண்டு திகழ்ந்திடும் இலக்குமியை இடது மடியில கொண்டிருக்கும் நரசிம்மனே! பரம்பொருளே உன்னை வணங்குகிறேன்.

சந்திரனையும், சூரியனையும் இருகண்களாகவும், கோபம் கொண்ட பார்வை உடைய மற்றொரு கண்ணை நெற்றியிலும் கொண்டு விளங்கும் நரசிம்மனே! ஒன்பது உருவங்களுடன் திகழ்ந்திடும் நரசிம்மனே! பவநாஸினி எனும் நதி ஓரத்தில் அமர்ந்து அருள் புரியும் நரசிம்மனே! ஒன்பான் சுவைகளுடன் ஒளிர்ந்திடும் நரசிம்மனே!



சரணமென வந்தோரக்கு ஆனந்தம் தந்திடும் நரசிம்மனே! நரகத்திலிருந்து விடுதலை தந்திடும் ஆற்றலுடைய பெயரைக் கொண்ட நரசிம்மனே! ஹரி எனவும், வேங்கடாத்ரி எனவும் அழைக்கப்பெறும் நரசிம்மனே, உனக்கு மங்களமும் வெற்றியும் உண்டாகட்டும் நரசிம்மனே!"



# ஸப்தகிரி


மே - 1996

தனிப்பிரதி ரூ. 4 வருடச்சந்தா ரூ. 48/-

மலர் 26 இதழ் 12



சிறப்பாசிரியர் :

திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீஅனுமான் - சித்திரம்: கே. ஜெகதீஷ்

முதல் உள்ளட்டை : மோகினி அவதாரம். -ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயில் பிரம்மோத்ஸவத்தின்போது.

2-வது உள்ளட்டை : ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில் - நாராயணவனம்.

பின்னட்டை : ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி கோயில் - ரிஷிகேஷ

JAGADISH

## உங்களுடன்....

வேத காலம் முதல் பாரதிதாசன் காலம் வரை அறிஞர்கள், மகான்கள், கலைஞர்கள், கவிஞர்கள் யாவருமே சமுதாயத்தினை மனதிற்கொண்டே தங்கள் சிந்தனையினை வளர்த்துக்கொண்டார்கள் என்பதும், தங்கள் வாழ்க்கையினை வகுத்துக் கொண்டார்கள் என்பதும் புராணங்களும், வரலாறும் நமக்குக் கூறிடும் செய்திகளாகும். இந்திய மண்ணின் சிறப்பு அது கொண்ட ஆன்மீக வாழ் வியலாகும். ஆன்மீகத்தின் ஆற்றல், பெருமை எவ்வகையில் மனித வாழ்வில் பெரும்பங்கு வகுத்துள்ளது என்பதை இந்திய சமய வரலாறு கூறும் மற்றுமொரு செய்தியாகும். இவ் ஆன்மீக வளர்ச்சியே இந்தியர்களின் உயர்வுக்கு வழி வகுக்கின்றது என்பதை அறிந்தே இறை உணர்வினை பலவகைகளில் தத்துவ விளக்கங்கள், ஆகம வழிபாடுகள், பூஜை விதிகள் என்று காலை முதல் இரவு வரை மனிதரின் அன்றாட வாழ்வில் ஊடுருவி அமைந்திடும் வகையில் பல்வேறு கால நிலைகளில். பல மகான்கள் தந்தருளி இம்மண்ணில் தோன்றி மறைந்துள்ளனர்.

கிருத யுகத்தில் தியானத்தாலும், திரதாயுகத்தில் யாகங்களாலும், துவாபர யுகத்தில் பூசைகளாலும் இறைவனை காணமுடியும் என்ற வகையில் இக்கலி யுகத்தில் நாளும் பிரச்சனைகளால் சூழப்பெற்றிருக்கும் சாமான்யர்க்கு உதவிடும் வகையில் வெறும் இறைநாம கோஷத்தினால் மட்டுமே அவ் இறைவனை அடை யமுடியும் என்ற ஒரு பக்தி நெறி இயக்கம் ஏற்பட்டபோது, அவ்வழியில் சென்று இம்மண்ணில் பக்தி உணர்வை மேலோங்கிச் செய்யும் பணியில் தென்னகம் பெரும் பங்கு வகுத்தது. சமணமும், புத்த மதமும் வடநாட்டில் காலூன்றி வளர்ந்த நிலையில் பகவத் கீதை, இராமாயணம், பாகவதம் ஆகியன பரவலாக பேசப்பட்ட போது, சைவமும், வைணவமும் இம்மண்ணில் நிலைபெற்றிடும் வகை யில் ஓர் புதிய சமய மறுமலர்ச்சியினை உருவாக்கிய பெருமையினை தென்னகம் பெற்றது. அதிலும் விசிஷ்டாத்வைதத்தின் பெருமை அருமையினை விளக்கி டும் ஸ்ரீவைஷ்ணவம் ஆழ்வார்களால், ஆசார்யர்களால் தமிழகத்தில் வேரூன்றி ஆலமரமாக தழைத்திட்டது.

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் முற்பகுதியில் மொகலாயர்களின் ஆதிக்கம் வடநாட்டைக் கடந்து தென்னகத்தில் தலைதூக்கிய காலக்கட்டத்தில், ஓர் புதிய பக்தி இயக்கம் இம்மண்ணில் தோன்றியது. தமிழில் நாயன்மார்கள், ஆழ்வார்கள், வடமொழியில் ஜெயதேவர், இந்தியில் சூர்தாஸ், மீராபாய், மராத் தியில் நாமதேவ், துக்காராம், கன்னடத்தில் புரந்தரதாஸ், கனகதாஸ், தெலுங்கில் க்ஷேத்ரய்ய, ராமதாஸ் போன்றோர் பல பக்திப்பாக்கள் புனைந்து பாடி ஒரு பக்தி விழிப்புணர்வை தோற்றுவித்தனர். இவ்வகையில் ஆந்திர மாநிலத்தில் கி.பி. 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீதாள்ளபாக்கம் அன்னமாசார்யா தெலுங்கு இலக்கியத்திலும், பக்தி நெறியிலும் ஒரு புதிய பாதையினை வகுத்திட்டார்.

ஸ்ரீஅன்னமாசார்யா சுமார் முப்பத்திரண்டாயிரம் கீர்த்தனைகள் புனைந்ததாக தெரியவந்தாலும், தற்போது நமக்கு செப்பேடுகளில் பொறிக்கப்பட்ட சுமார் இரண்டாயிரம் கீர்த்தனைகள் மட்டுமே கிடைக்கப்பெற்றுள்ளன. ஒரு பானைச் சோற்றிற்கு ஒரு சில பருக்கைகளே போதுமானது என்பதற்கிணங்க, இக்கீர்த் தனைகளே அவர்தம் ஆழ்ந்த புலமைக்கும், தீவிர பக்தி உணர்வுக்கும், மொழி ஆற்றலுக்கும் சான்றாக உள்ளன.

அவர்தம் ஒவ்வொரு கீர்த்தனையும் வேங்கடவன்மீது அவர்கொண்ட 'பக்தி வெறி'யினையும், வைணவ சமய ஈடுபாட்டினையும் அணுஅணுவாக விளக்கிக்கூறு வனவாக அமைந்துள்ளன. அதேசமயத்து மூட பக்தியினையும், மூடநம்பிக்கையி னையும் சாடிடும் அவர்தம் அறிவுரை, குலம் கண்டு பார்க்காது குணம் கண்டு மனிதனை எடைபோடவேண்டும் என்ற அவர்தம் தெளிவுரை, சங்கடங்கள் தீர சடங்குகள் அற்ற எளிமையும், தூய்மையும் கொண்ட பக்தி உணர்வின் அவசி யத்தை வலியுறுத்தும் அவர்தம் விளக்கவுரை யாவற்றையும் அவர்தம் கீர்த்தனை களில் மிளிர்வதை நாம் காணலாம். நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் ஆகியோரின் வைணவதத்தத்துவ சிந்தனைகளும், புரந்தரதாஸரின் பக்தி உணர்வும் அவர் பாடல்களில் ஒளிரக்காணலாம். இசை வழியாக பக்தி உணர்வினை ஊட்டுவதன்மூலம் இக்கலியுகத்தில் இறை அருளை நாம் எளிதில் பெற்றிடமு டியும் என்பதற்கு அவருடைய பாடல்கள் கட்டியம் கூறுவனவாக விளங்கியது மட்டுமின்றி, பின்னர் எழுந்த பல கீர்த்தனாசார்யர்களுக்கு அவர் ஒரு முன்னோ டியாகவும் திகழ்ந்திட்டார். அன்னமய்யா மட்டுமின்றி அவர்தம் மனைவி, மகன், பேரன் என்று வைணவம் மற்றும் தெலுங்கு இலக்கியத்திற்குத் தங்களுடைய புலமையைத் தந்திட்டதன் மூலம் ஒரு நல்ல தலைமுறையினரை வழங்கிட்ட சிறப்பு அவருடைய பெருமையினை மேலும் விளங்கச் செய்துள்ளது.

அன்னமய்யா பாடல்களை படித்தோமேயானால் - பிறர் சொல்லக் கேட் டோமேயானால், அவற்றில் புதைந்துள்ள பக்தி ஊற்றினை, ஸ்ரீவைஷ்ணவ சிறப்பினை, மொழி ஆற்றலை, கற்பனைத்திறனை, உவமை அழகினை, சொற்க ளின் எளிமையை, இசைப்பெருமையினை ஒவ்வொருவரும் அனுபவிப்பர் என்றே கூறுதல் வேண்டும். அவ் அரிய அனுபவத்தை அனைவரும்பெற வேண்டும் என்பதற்காகவே தி.தி. தேவஸ்தானம் அன்னமய்யாவின் பிறந்தநாள், நினைவு நாள் ஆகியவற்றை புகழ்பெற்ற, வளர்ந்துவரும் இசைக்கலைஞர்கள் பங்கேற்கும் படியான இசை விழாக்களாக திருப்பதி, திருமலை உள்ளிட்டு தென்னகத்தில் பல்வேறு இடங்களில் ஒவ்வொரு ஆண்டும் நடத்திவருகின்றது. 'வேங்கட பக்தி' யினை வலியுறுத்தும் அன்னமய்யா பாடல்கள் மனிதருள் அன்பு, அமைதி, பக்தி ஆகியவற்றை நிச்சியமாக ஏற்படுத்திடும் என்பது உறுதி. அதுவே தி.தி. தேவஸ்தானத்தின் இறுதி குறிக்கோளுமாகும்.



# நன் மக்களைப் பெற்று மகிழ்வர்

திரு. A. ஸ்ரீராமுலு தேசிகன் - ஸ்ரீவில்லிபுத்தூர்.

'பெரியாழ்வார் திருமகளாகிய அடியாள் (ஆண்டாள்) கண்ணனுக்கே உரியவளானேன். அவனுக்கு வாழ்க்கைப்பட்ட இன்ப நிகழ்ச்சிகளைக் கனவிலே கண்டு தோழியிடம் கூறினேன். அடியாளது தூய அனுபவங்களைப் பத்துப பாசுரங்களில் வெளியிட்டுள்ளேன் இந்த இனிய பதிகத்தை வாயினால் பாடி மனத்தினால் கண்ணனெம் பெருமானைச் சிந்திப்பவர்கள் தீர்க்க ஆயுளுடன நற்குணங்கள் அமைந்த நன் மக்களைப் பெற்று மகிழ்வார்கள' என்பது அடியாளின் (ஆண்டாளின்) திருவுள்ளக் கருத்தாகும்.

விழிப்பு நிலையினைப் போல் கனவு நிலையிலும ஜீவன் தன் கர்மத்தின் பயனாகப் பல அனுபவங்களைப் பெறுகிறான். கனவு காணப்பெறும் ஜீவனுக்கு மட்டும் புலனாகும்படியும், அவன்மட்டும் அனுபவிக்கும் படியும் உள்ள பல பொருள்களை அந்தக்கனவுப் பொழுதில் மட்டும் நின்று கழியும்படி எம்பெருமான் ஓர் விசித்திரப் படைப்பை தன் சங்கல்பத்தாலே செய்கிறான். ஜீவனுக்கு விழிப்பு நிலையில் வரப்போகும் நன்மை தீமைகளைக் குறிப்பிடும் நல்ல, தீய சின்னங்களைக் கூடக் கனவு நிலையில் காட்டுவதுண்டு.

எனவே உபநிடதம், பிரம்ம சூத்திரம் மற்றும் ஆசார்ய புருஷர்கள் கூறிய அனுபவங்களைக் கொண்டு கனவில் நடக்கும் நிகழ்ச்சிகளை வைணவ சமயம் உண்மையானவைகளாகவே ஏற்றுக் கொள்கிறது.

அப்படி ஸ்ரீஆண்டாள் திருக்கல்யாணத்தை ஏற்றுக் கொள்ளும் போது திருமணத தம்பதிகளின வாழ்வைப் புனிதமாக்கும் தத்துவ உபதேசங்களைக் காணலாம். அது தர்ம ஞானக் கருவூலமாக விளங்குவதை உணரலாம். சீதாப்பிராட்டி, ருக்மிணி தேவியார் திருமணங்களில் எம்பெருமான மானுட அவதாரத்தில் இருந்தான். ஆனால் ஆண்டாள திருமணத்தின் போது அப்படியிருக்கவில்லை. எம்பெருமான அரச்சை வடிவில் (சிலாரூபத்தில்) இருநதான.

'பிராணிகளிடம தருமம தவறாத ஆசையாக உள்ளேன்', எனபது கீதையில கண்ணன் வாக்கு. (அத். 7 சுலோ 11)

அந்த ஆசையில் வாழப் புலன்களால்
உண்டாகும் ஆசையை ஆசார்யனருளால் திவ்ய மங்கள விக்கிரகத்தில் செலுத்தும் பொழுது 'தர்மம் என்பது என்ன? என்பதை அறிய முடியும் அப்பொழுது பிறப்பென்னும் பேதைமை நீக்கும் சிறப்பென்னும் செம்பொருளை உணர முடியும். உணரும் பொழுதே வீடு பேறடைய முடியும் என்ற தத்துவத்தை ஆண்டாள் திருக்கல்யாணத்தில் கண்டு தெளிவடைந்து மண்ணுலக மக்களிடம் கூறினார், தெய்வத் திரு இராமாநுஜர்.

"..........கண்ணனுக்கே
ஆமது காமம் அறம் பொருள்
வீடிதற் கென்றுரைத்தான்
வாமனன் சீலன், இராமாநுசனிந்த
மண் மிசையே."

--இராமாநுஜ நூற்றந்தாதி 40

எனவே ஆண்டாள் திருக்கல்யாணம் ஜீவாத்மா பரமாத்மா சம்பந்தத்தைக் காட்டும் ஓர் தங்கச் சுரங்கம் என்பது தெளிவு.

'தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர் நடையிட்டு வருவான்', என்ற பெரியாழ்வார் வாக்கின்படி கிருஷ்ணன் தன் தோழர்கள் ஆயிரம் பேரும் தன்னை விடத் தாழ்ந்திருப்பதைப் பொறுக்காமல், அவர்கள் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு யானை மேலும் எற்றிக் கொண்டான். 'தம்மையே நாளும், வணங்கித் தொழுவார்க்கும் தம்மையே ஒக்க அருள் செய்வர்', என்பதன்றோ திருமங்கையாழ்வார் வாக்கு.

ஆனால் கண்ணன் யானை மீது உட்காரவில்லை; நடந்து வந்தான். உற்சாகமூட்டும் மாப்பிள்ளை ஊர்வலத்தில் கல்யாண மாப்பிள்ளையான கண்ணன், தனது உற்சாகத்தை அடக்கிக் கொண்டு தான்மட்டும் நடந்து வந்தான். குணபூர்த்தியுடைய அந்த கண்ணபிரானை 'நம்பி' என்று விளிக்கிறாள் ஆண்டாள்.

'வாரண மாயிரம் சூழ வலஞ்செய்து
நாரணன் நம்பி நடக்கின்றான்....'

எப்பொழுதும் மாறுபடாத தன்மையுள்ள ஸத்யத்வம், எப்போழுதும் குறைவு படாத ஞான சோருபமான தன்மையுள்ள ஜ்ஞானத்வம், எவ்விடத்தி

லும், எக்காலத்திலும், எல்லாப் பொருள்களிலும் சொருபமாயிருக்கும் தன்மையுள்ள அனந்தத்வம், எது நேரிடினும் எப்பொழுதும் ஆனந்த சொருபமாயிருக்கும் ஆனந்தத்வம், எந்தச் சூழ் நிலையிலும் குற்றமில்லாத தன்மையுள்ள அமலத்வம் ஆகிய ஐந்து குணங்களை ஸ்வருப நிருபக விசேஷணங்களாகக் கண்ணபிரான் பெற்றுள்ளான். அதனால்தான் அவன் தன்னை மீறிய உற்சாகம் தரும் சூழ்நிலையிலும் அடக்கமாக எளிமையாக நடந்து கொள்கிறான். மாப்பிள்ளை ஊர் வலத்தில் நடந்து வந்தான்.

இரணியனுக்கு மறக்கருணை காட்டிக் கடைசியில் அவனைக் கொன்ற சிங்கப்பிரான், தேவர்கள் வேண்டுகோளுக்கிணங்க சிற்றம் தணிந்து அறக்கருணையோடு திருமகளையும் பக்தப்பிரகலாதனையும் நோக்கிக் காப்பாற்றினான். குடிசைகளின் முற்றங்களைத் தூய்மையாக்கும் தென்றற் காற்றைப் போல், வான வெளியைத் தூய்மையாக்கப் புயற் காற்றும் சில நேரங்களில் பயன்படுவதால், அந்தப் புயற் காற்றும் சிற்றுயர் சிங்கமான கண்ணபிரானைத் தனது கணவனாக வரித்துக் கோளரி, என்றும், பிராட்டி சம்பந்தத்தால் அவனது கருணை வெள்ளம் அடியார்களின் இதயங்களில் பாய்கிறதென்பதை 'மாதவன்' என்ற சொல்லிலும் குறிப்பிடுகிறாள், ஆண்டாள்.

கோளரி மாதவன் இருநாமங்களைச் சேர்த்துச் சொல்வதன் மூலம் ஜீவன்கள் கர்மக் கட்டுகளில் உழலும் பொழுது சமயோசித புத்தியின் மூலம் விடுபட, இலட்சுமி நரஸிம்ம உபாசனை முக்கியம் என்பதையும் குறிப்புணர்த்தும்.

ஜீவனின் சிந்தனையில் படரும் அகங்காரமென்னும் கொடிய நோயை, இந்திரனின் அகங்காரத்தை அகற்றக் குன்றுக் குடையாகப் பிடித்த கோவிந்தன் செயலைக் கடைப் பிடிப்பதின் மூலமே நீக்க முடியும் என்று 'அடியேற்கு அணியனாய் வந்து என் சிந்தையில் வெந்துயர் அறுக்கும் ஆயனாய் அன்று குன்றமெடுத்தானே' என்று கூறுவார் திருமங்கையாழ்வார்.

எனவே ஆண்டாள் தன் மணாளனைக் 'கோளரி' 'மாதவன்', 'கோவிந்தன்', என்ற திருநாமங்களால் விளிக்கிறாள்.

தம்பதிகள் பரிசுத்தமான தூய உணர்வுகளோடு உடலுறவில் ஈடுபடும்பொழுது நன்மக்களைப் பெறுவார்கள். கச்யபர் - திதி தம்பதிகள் அப்படி ஈடுபடாமையால் அரக்கர்கள் பிறந்தார்கள்.

மந்திரங்களை நன்கு உச்சரித்துச் சொல்வதின் மூலமும், கேட்பதின் மூலமும் தூய உணர்வுகளைப் பெறலாம். பெறவேண்டும் என்ற நோக்கில் தனது திருமண நிச்சயதார்த்தத்தை 'மகட் பேசி மந்திரித்து' என்ற சொற்களாலும், திருமணப் புடவையை மந்திரக்கோடி என்ற சொல்லாலும், தன் திருமணத்தில் ஓத வேண்டிய மந்திரங்களை ஒன்றுகூட விடாமல் ஓதியவர்கள் சிறந்த ஞானமும் சிறந்த ஒழுக்கமும் சாஸ்திரவிதி மீறுத அனுஷ்டானமுள்ள பண்பாட்டில் உயர்ந்த பரிசுத்தமானவர்கள் என்பதை, 'வாய்நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்....' என்ற பாசுர அடியிலும் குறிப்புணர்த்துகிறாள், ஆண்டாள்.

திருமணத்தில் முதல் சடங்கான காப்பு கட்டும் நிகழ்ச்சி தொடங்குமுன் ஆயுள், ஐஸ்வர்யம் முதலிய நன்மைகள் வளர மங்கள ஸ்நானம் செய்வது சாஸ்திர விதியாகும்.

'ஆழியேந்திய கையனை அந்தணர் கற்பினை கழுநீர் மலரும் வயல் கண்ண மங்கையுள் கண்டு கொண்டேனே', என்று திருமங்கையாழ்வார் கண்ட அந்தணர்கள், 'சேய்த் தீர்த்தமாய் நின்ற செங்கண்மால் தன்னுடைய வாய்த்தீர்த்தம் பாய்ந்தாடும்' வல்லமையுடைய ஆண்டாளை, பூப்புனைக் கண்ணிப் புனிதனோடு காப்பு நாண் கட்டு முன்னே, நால் திசைத் தீர்த்தங் கொணர்ந்து நனி நல்கி திவ்ய தம்பதிகளுக்கு மங்கள ஸ்நானம் செய்தார்கள்.

இளம் வயதிலேயே ஆன்மிக ஞானம் பெற்றவர்களே திருமண வைபவங்களில் முன்னின்று ஈடுபட வேண்டும் என்பது ஆண்டாள் திருவுள்ளம்.

மணப்பந்தலுக்குள் சூரியனது ஒளிபோன்ற ஒளியையுடைய மங்கள தீபத்தை அழகான இளம் பெண்கள், தம்பதிகளாகிய தங்களுக்கு முன் எதிர்கொண்டு வருகிறுர்கள் என்கிறாள் ஆண்டாள். சூரிய ஒளி என்றும் அழியாத ஆன்ம ஞானத்தையும், 'சதிரிள மடவார்', என்ற சொல் இளமையிலேயே அதனைக் கைவரப் பெற்றவர்கள் என்பதையும் குறிப்புணர்த்தும்.

'உரைக்க வல்லார்க்கு வைகுந்தமாகும் தம் ஊரெல்லாம்', என்ற ஆழ்வார் வாக்குப்படி பரமபதத்தைவிட பூவுலகில் தான் முதலில் பிறந்த மதுரையம்பதியில்தான் கண்ணனுக்கு விருப்

பம் அதிகம். எனவே ஆண்டாள் அவனை மதுரையார மன்னன் என்று விளித்து அவன் மணப் பந்தலில் பாதுகையுடன் நுழையும் பொழுது பூமியெங்கும் அதிர்ந்தது என்றும் கூறுகிறாள். திருமணம் என்பது நிச்சயிக்கப் பட்டு நடத்தும் விபத்து மோதலில் ராட்சத பள்ளம் விழாமல்காக்க, இறைவனுக்கும் ஜீவான்மாவுக்கும் உள்ள சரீர ஆத்ம பாவத்தைத் தம்பதிகள் உணர்ந்தால் நலமாகும்.

துளசி இலை இரண்டு இரண்டாகப் பிரிந்தாலும் ஒரே காம்பில் இருக்கும். வாடிய காலத்தும் இயற்கையான தனது நறுமணத்தை அளிக்கத் தவறாது. அதுபோல் சேதன, அசேதனங்கள் இரண்டாகப் பிரிந்திருந்தாலும் இறைவனையே உடலாகக் கொண்டுள்ளன. அதனை உணரும் சேதனன் துன்பங்களில் உழலும் பொழுதும் இயற்கையான தனது நற்குணங்களிலிருந்து நழுவமாட்டான்.

துளாய் மலர் சூடியுள்ள தனது திருவுருவத்தில் மனம் வைக்கமுடியாதபடி மக்களுக்குப் பல சமய மதி கொடுத்தாலும், (சரீராத்ம பாவம் உணர்த்தும்) துளாய் மலரில்தான் இறைவன் மனம் வைக்கிறான் என்கிறார், ஆழ்வார்.

"மாட்டாதே யாகிலும், இம் மலர்
தலை மா ஞாலம், நின்
மாட்டாய மலர் புரையும்
திருவுருவம் மனம் வைக்க
மாட்டாத பலசமய மதி
கொடுத்தாய், மலர்த்துழாய்
மாட்டே நீ மனம் வைத்தாய்
மா ஞாலம் வருந்தாதே."
(திருவாய்மொழி 3.1.4)

என்பது அவர் தம் வாக்கு.

ஜீவ-பர சம்பந்தம், சரீராத்ம பாவம் காட்டும் துளசிச்செடியின் கீழ் அவதரித்த ஆண்டாளைத் திருமணம் செய்ய மணப் பந்தலில் கிருஷ்ணன் நுழையும் பொழுது மிடுக்குடன் நடந்தான். அவனது பாதுகைகளின் வலிமையினால் பூமியெங்கும் அதிர்ந்தது.

ஒன்றுக் கொன்று உறவு முறையில் திருமணம் செய்தாலும் மணமகன் நற்குணங்களுடையவனாகவும், மது முதலிய தீய பழக்கங்களுக்கு அடிமையாகாதவனாகவும் இருக்க வேண்டும் என்பதை 'மைத்துனன் நம்பி மது சூதனன்', என்ற பாசுர அடியில குறிப்புணர்த்துகிறாள் ஆண்டாள்.

'கொழுந்து விட்டு எரியும் நெருப்பு விறகை நீராக்குதல் போல், அர்ஜுனா! ஞான நெருப்பானது (அனுபவப்பட்ட முழுஅறிவு) செயல்களின் நல்ல, தீய விளைவுகளையெல்லாம் நீராக்கும்', என்ற கீதா வாக்கினைத் (4.37) தம்பதிகள் கடைப் பிடித்துப், 'புலன் ஐந்துக்கும் சொலப்படான் உணர்வின் மூர்த்தி', என்ற ஆழ்வார் காட்டும் ஈஸ்வரனை அடைய வேண்டுமென்ற நோக்கிலேயே, மண விழாவில் தீ வலம் செய்யும் சடங்கு நிகழ்ச்சி அமைக்கப்பட்டுள்ளது.

பதினாயிரம் பெண்களுடன் ராசக்கிரீடை செய்தும், தான் ஓர் நைஷ்டிக பிரம்மச்சாரி என்று கூறிப் பரீட்சித்தின் உயிரைக் காப்பாற்றிய கிருஷ்ணன், மிடுக்கோடு, மிக்க சினமுடைய மத யானை போல் வந்து அடியாள் கையைப்பற்ற, இருவரும் அக்னியை வலம் சுற்றி வந்தோம் என்கிறாள், ஆண்டாள்.

சில சந்தர்ப்பங்களில் மனைவியின் விருப்பத்திற்கேற்பவும் கணவன் நடந்து கொள்ள வேண்டும் என்பதைக் கிருஷ்ணன், மனத் தெளிவு பெற்ற அடியார்கள் விருப்பப்படி தான நடந்து குறிப்புணர்த்துகிறான். செம்மையுடைய கிருஷ்ணனது திருக்கரங்கள், பரம பக்தியில் திகழ்ந்து பிஞ்சிலேயே அறிவு முதிர்ச்சியடைந்த ஆண்டாளுடைய தாள பற்றி, அம்மி, மிதிக்கச் செய்தது.

'அழகிய வில்போன்ற புருவத்தையும் ஒளிபொருந்திய முகத்தையும் உடையவர்கள் எம சகோதரர்கள்' என்று ஆண்டாள கூறுவதின் மூலம், மணப்பெண்ணின் சகோதரர்கள் கம்பீரமான தோற்றத்துடன் திருமணச் சடங்குகளில் ஈடுபட வேண்டு மென்பது தெரியும்.

அறிவு பெற்ற ஆன்மா (சேதனன்) செய்யும் கர்ம பலத் தியாகத்தைக் குங்குமமும், அந்த தியாகம், செய்பவனுக்கும் சமுதாயத்திற்கும் பயன்படவேண்டு மென்பதை சந்தனமும் குறிப்புணர்த்தும்.

சுற்றுப்புறச் சூழ்நிலைகளைப் பொறுத்தே கர்ம பலத் தியாகம் பயன்படும். புனிதமான உணர்வுகளை ஊட்டும் நிலையில் வீதிகளில் செய்யும் அலங்காரங்கள் அமையவேண்டும் என்ற கருத்தை 'மங்கல வீதி' என்ற தொடர் குறிக்கும். அந்த வீதியிலே தானும் அந்த கிருஷ்ணனும் யானை மேல் ஏறி ஊர் வலம் வந்து பின், திருமணக் களைப்புதீர வாசனை நீரினால் தங்களிருவரையும் திருமஞ்சனம் செய்தார்கள் என்று கூறுகிறாள்.

கனவுப் பதிகத்தில் ஆண்டாள் அருளிய பாசுரங்களைப் பாடி, அவைகளின் கருத்துக்களைச் சிந்திப்பவர்கள் மாயன் மணிவண்ணன் தாள் பணியும் நன்மக்களைப் பெற்று மகிழ்வார்கள் என்பது அவளது திருவுள்ளக் கருத்து.

மங்களம். *

# ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம்

ஸ்ரீமான் உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர் - திருப்பதி.

*ஸ்ரீமந்நபீஷ்ட வரதாகில லோக
பந்தோ
ஸ்ரீஸ்ரீநிவாஸ ஜகதேக தயைக
ஸிந்தோ ।
ஸ்ரீதேவதாக்ருஹ புஜாந்தர
திவ்ய மூர்த்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ
ஸுப்ரபாதம் ।। 13 ।।*

(ப) ச்ரீமந் = செல்வம் மாறுத வனே, அபீஷ்டவரத = வேண்டிய வரங்களைத் தருபவனே, அகில லோக பந்தோ = எல்லா மக்களுக்கும் எல்லாவுறவுமான வனே, ஸ்ரீஸ்ரீநிவாஸ= அழகிய ஸ்ரீநிவாஸனே, ஜகத் ஏக = உலகில் நிகரற்ற, தயா ஏக ஸிந்தோ = கருணைக்கு ஒரே கடல் போன்றவனே, ஸ்ரீதேவதா க்ருஹ புஜாந்தர = திருமக ளென்னும் தேவதைக்கு இருப் பிடமான திருமார்பையுடைய வனே, திவ்யமூர்த்தே = அழகிய திருமேனியுடையவனே, ஸ்ரீவேங்கடாசலபதே = திரு வேங்கடமலைக்கு அரசே, தவ ஸுப்ரபாதம் = உனக்கிது நல் விடிவாகுக.

(க) செல்வம் படைத்து தயை யும் நிறைந்து எமக்குத் தாயா கிய திருமகள் தங்கும் திரு மார்போடு விளங்குகின்ற திரு மேனியை எங்களுக்குக் காட்டிக் கொண்டு, வேண்டும் வரங்க ளையும் தருமவனாய்த் திருவேங் கடமலையில் வாழும் ஸ்ரீநிவா ஸப் பெருமானே உனக்கிது நல்விடிவாகுக.

(வி) ஸ்ரீமந் - இங்கு ஸ்ரீசப் தம் நித்யவிபூதி லீலாவிபூதியா கிய இரண்டு செல்வங்களை யும் காட்டும். இதனால் அபீஷ்டவரத என்பதற்குக் கார ணம் காட்டப்படுகிறது. செல்வ மிருந்தாலல்லவா வேண்டுவோர் வேண்டியவற்றை அளிக்கமுடி



யும். ஸ்ரீஸ்ரீனிவாஸ என்பது திருவேங்கடமுடையானுடைய திருப்பெயர்; பிராட்டிக்கு இருப்பிடம் என்பது அதன் பொருள். எப்படி இருப்பிடமாகிறாள் என்பதை விவரிக்கிறது ஸ்ரீதேவதா க்ருஹ புஜாந்தர என்பது. திருமகளுக்குத் திருமார்பில இடந்தந்து அதன் மூலமாக அவளுக்கு இருப்பிடமாகிறானென்க. ஏறகனவே எம பெருமானிடமுள்ள தயை திருமார்பிலுள்ள பிராட்டியினால் வளர்க்கப்பட்டு அவவெம்பெருமான் தயைக்கு ஒப்பற்றதோர் கடல் போன்றவனாக ஆகி விடுகிறானெனகிறது - ஐகதேகத்தயைக ஸிந்தோ என்னும் சொல். அவன் திவ்ய மூர்த்தியுடையவனாவதும் பிராட்டியினால் தான்; பெருமானது கறுத்த திருமேனி பொன்னிறத்தவளான திருமகளின் திருமேனி ஸம்பந்தத்தினால் பளிச்சென்று எடுத்துக்காட்டுவதனால் அழகிய பரபாக ஸ்ரீயையுடையதிருமேனியையுடையவனாகிறான் அவன். பரபாக மென்றால் பகைத் தொடை.

**ஸ்ரீஸ்வாமிபுஷ்கரிணி காப்லவ**
**நிர்மலாங்கா:**
**ச்ரேயோஅர்த்திநோ ஹரவிரிஞ்சி**
**ஸநந்தனாத்யா: ।**
**த்வாரே வஸந்தி வரவேத்ர**
**ஹதோத்தமாங்கா:**
**ஸ்ரீவேங்கடாசலபதே தவ**
**ஸுப்ரபாதம் ।। 14 ।।**

(ப) ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணிகா ஆப்லவ நிர்மலாங்கா:- ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணியில் நீராடியதனால் நிர்மலமான தேகமுடையவர்களும், ச்ரேய: அர்த்திந: (உன்னிடமிருந்து ஒரு) மேன்மையை(ப்பெற) விரும்புமவர்களுமான ஹர, விரிஞ்சி ஸநந்தந ஆத்யா: = சிவன் பிரமதேவன ஸநந்தனர முதலியவரகள, த்வாரே (உன்கோயிலின) வாசலில், வரவேத்ர ஹத உத்தமாங்கா: = (த்வாரபாலகரகளின) உயர்நத பிரம்பினால அடிபட்ட தலையை உடையவரகளாய, வஸந்தி = இருக்கினறனர். ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம்.

(க) திருமலையரசே பிரமன் சிவன முதலான தேவரும ஸநந்தனர முதலிய யோகிகளும கோனேரியில நீராடித் தூயமை பெற்று உனவாசற காப்போரின் பிரம்படியையும விருப்பத்துடன் ஏற்றுக்கொண்டு அகலாமல வாசற்படியையே தங்குமிடமாகக் கொண்டு வாழ்கினறனர். அவரகள் தரிசனம செயய உனக்கிது நலவிடிவாகுக.

(வி) ஸ்ரீஸவாமியின புஷ்கரிணிகை என்றும ஸ்ரீஸ்வாமி நியாகிய புஷகரிணிகை எனறும் ஸ்ரீஸ்வாமி புஷகரிணிகா என்னும் பதத்திற்கு இருவரை வ்யுத்பத்திகள. (கோனேரி என்பதும் கோனுடைய ஏரி என்றும் கோனாகிய ஏரி என்றும் இருவகையாக விரியும்) முறையே ஸ்வாமியான ஸ்ரீநிவாஸன் அவபிரதம் கண்டருளும் புஷ்கரிணி என்றும், புஷ்கரிணிகளுக்குள் தலைமைபெற்ற புஷ்கரிணி என்றும் இருவகையான பொருள்களும் புராணங்களில் கூறப்பட்டுள்ளன.

வாமன புராணம் 32ம் அத்தியாயத்தில் பெருமாள சங்கராஜனிடம் 'அத்திருமலையில் திவ்யமானதும் பெரியதும் பாவம் போக்குவதும் புண்ணியந்தருவதும் கங்கை முதலிய ஸகல தீர்த்தங்களோடு ஸமானமானதும் தூயநீரையுடையதும் ஸ்வாமி புஷ்கரிணியென்று மூவுலகங்களிலும் பிரசித்தி பெற்றதுமான புஷ்கரிணி ஒன்று உள்ளது. அதனில நீராடி மனிதர பாவங்களிலிருந்து நீங்கப்பெறுவர்' என்று கூறியது கொண்டு இக்கோனேரியின தூயமை அறிக.

ஏற்கெனவே மேன்மை பெற்றிருக்கும சிவனும் பிரமனும் மேலும் மேன்மை பெறுவதாவது - உள்ள மேனமை இடையிலே அறறுப் போகாமல் நீடித்தலேயாம. ஸனந்தனாதியர் ஸதா ப்ரஹ்மத்யானமே செய்யுமவர்கள. அது நடுவில கெடாமல இருக்கவேண்டுமென்று வேண்டவந்துள்ளனர்.

'பிரமன பல்லாயிரக்கணக்கான கோடியுகங்கள் விஷ்ணுவை ஆராதித்து மூவுலகங்களைப் படைத்தல் என்னும் அதிகாரத்தை மறுபடியும் பெற்றதாகக் கேள்வி' என்னும் மகாபாரத சலோகம் இங்கு நினைக்கத்தக்கது.

வரவேத்ர ஹதோத்தமாங்கா: என்பதற்கு முற்கூறிய பொருளேயன்றி, (வேத்ரவரம் வ்ரஜாமி), (ஸ்ரீரங்க. பூர்வ 58) என்று பட்டர் அருளிச்செய்தபடி கர்ப்பக்ருஹத்தின் வெளி வாசலில் குறுககாக அமைக்கப்பட்டிருக்கும் உழல்தடியில் மோதிக் கொண்ட தலையுடையவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். பிரம்பின் மோதல் கிடைத்ததனால் இவர்களின் தலைகள் உத்தமாங்கமென்னும் ஸார்த்தக நாமதேயம் பெறுவனவாயின என்க.

**ஸ்ரீசேஷசைல கருடாசல**
**வேங்கடாத்ரி**
**நாராயணாத்ரி வ்ருஷபாத்ரி**
**வ்ருஷாத்ரி முக்யாம் ।**
**ஆக்யாம் த்வதீயவஸதேரநிசம்**
**வதந்தி**

ஸ்ரீவேங்கடாசலபதே தவ

ஸுப்ரபாதம் ।। 15 ।।

(ப) ஸ்ரீசேஷசைல கருடாசல வேங்கடாத்ரி நாராயணத்ரி வ்ருஷபாத்ரி வ்ருஷாத்ரி முக்க்யாம = ஆதிசேஷமலை, கருடமலை, வேங்கடமலை, நாராயணமலை, விருஷபமலை, விருஷமலை முதலிய ஆக்க்யாம் = பெயர்களை, தவதீய வஸதே: = உனது இருப்பிடமான திருமலைக்கு, அநிசம் = எப்போதும், வதந்தி = செல்லுகின்றனர். ஸ்ரீவேங்கடா - ஸுப்ரபாதம்.

(க) திருவேங்கடமுடையானே, இங்கு வந்திருப்பவர்கள் உன வாஸஸ்தலமான திருமலையின் பற்பல திருநாமங்களை ஓயாமல் சொல்லிக்கொண்டிருக்கின்றனர். உனக்கிது நல்விடிவாகுக.

(வி) ஆதிசேஷனே திருமலையாக அவதரித்ததனால் இது சேஷாசலமெனப்பட்டது. ப்ரஹ்மாண்டபுராணம் 2ம் அத்தியாயத்தில் பகவான் சேஷனைக் குறித்து 'விளையாடுவதற்குத் தக்க இடத்தில் வசிக்கவேண்டுமென்று என் விருப்பம்; நாரதர் கூறிய வார்த்தையைக் கேட்டாயல்லவா? அவர் குறிப்பிட்ட இடத்தில் பூவுலகில் நீ ஒருமலையுருவங்கொண்டு இருக்கக்கடவாய்; உன் படங்களின் கீழ்ப்பகுதியில் நான் பிராட்டியோடு வசிக்கக்கடவேன்' என்று கூறியதும் சேஷன் அப்படியே மலையுருக்கொண்டதும் காணத்தக்கது.

கருடாசலம் = கருடனால் கொண்டுவரப்பட்டமலை.

ச்வேத வராகப் பெருமான் பூமியை முன்புபோலவே நிலைநிறுத்தி உலகோரை உய்வித்துவிட்டு பூமியிலேயே வசிக்க நினைத்து, கருடனிடம் மஹாபலசாலியான வினதை சிறுவனே நீ விரைவாகப் பரமபதம் சென்று அங்குள்ள எனது விளையாட்டுமலையை இங்கு எடுத்துவா' என்று கட்டளையிட்டதும் அவர் அதையெடுத்து வந்ததும் வராகபுராணம் முதற்பகுதி 2ம் அத்தியாயத்தில் நோக்கத்தக்கது.

வேங்கடாத்ரி - வேம் என்பது மோக்ஷத்தைக் குறிக்கும் பீஜாக்ஷரம். கடம் என்று செல்வம் கூறப்படுகிறது. ஆக மோக்ஷமும் இம்மை மறுமைச் செல்வமும் மக்கள் திரளாலே பெறப்படுவதனால் வேங்கடாத்ரியென்று கருதப்பட்டது' என்று வராக புராணம் முதற்பகுதி 4ம் அத்தியாயத்திலும், 'வேம் என்று ஸர்வ பாபங்களையும் கூறுவர். கடமென்று அதைக் கொளுத்துதல் கூறப்படுகிறது. பாபங்களை எரித்தலால் இது வேங்கடமலையென்று உலகில் பிரசித்தமான கீர்த்தியையுடையதாயிற்று' என்று பவிஷ்யோத்தர புராணம் 2ம் அத்தியாயத்திலும் உரைத்ததற்குச் சேர வேங்கடாத்ரி என்றதற்கு இரண்டு பொருள்கள் உள்ளமை காண்க.

நாராயணத்ரி - நாராயணன் என்னும் அந்தணனொருவன் இம்மலையில் கோர மாதவம் செய்து பகவானை நேரில் கண்டு இம்மலை தன் பெயரால் விளங்கவேண்டுமென்று வரம் கேட்க அதைப்பகவான் ஒப்புக்கொண்டதனால் இது நாராயணத்ரி ஆயிற்றென்று ப்ரஹ்மாண்டபுராணம் 3ம் அத்தியாயத்தில் உள்ளமை காண்க.

வ்ருஷபாத்ரி - ஸாதுக்களை நலிந்து கொண்டிருந்த சிவபக்தனான வ்ருஷபனென்னும் அசுரன் தன்னெதிரில் திடீரென்று தோன்றிய ஒருமலையில் வேடனாய்த் தென்பட்ட பகவானோடு போரிடத் தொடங்க அப்பெருமான் சக்கரத்தை ஏவ, அதனால் அவன் மரணமடையும்போது தன்பெயரால் இம்மலை விளங்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி இது வ்ருஷபாத்ரியாயிற்று. இச்செய்தியை ப்ரஹ்மாண்டபுராணத்தில் 5ம் அத்தியாயத்தில் காண்க.

வ்ருஷாத்ரி - வ்ருஷன் என்னும் மனு ஒருவன் இங்குத் தவமியற்ற அதனால் மகிழ்ந்த வராகப்பெருமான் (வ்ருஷம்=) தருமமானது நீ தவமியற்றி வளர்ந்ததனால் இம்மலை வ்ருஷாத்ரியென்று பெயர் பெறுவதாகுக' என்று வரந்தந்தமை வாமன புராணம் 22 ம் அத்தியாயத்தில் உள்ளமை கவனிக்க. இன்னும் அஞ்ஜநாசலம் முதலிய பல பெயர்கள் இம்மலைக்கு உள்ளமையும் புராணங்களில் அங்கங்குக் காணத்தக்கது.

திருமலையின் பெயரைச் சொல்லுகின்றவர்களாக, முன் ச்லோகத்திற் கூறப்பட்ட பிரமன் முதலியோரைக் கொள்க.

**ஸேவாபரா: சிவஸுரேச க்ருசாநுதர்ம ரக்ஷோSம்புநாத பவமாந**

**தநாதி நாதா: ।**

**பத்தாஞ்ஜலிப்ரவிலஸந்நிஜ**

**சிர்ஷதேசா:**

**ஸ்ரீவேங்கடாசலபதே தவ**

**ஸுப்ரபாதம் ।। 16 ।।**

(ப) ஸேவாபரா: = உனது ஸேவையில் ஊற்றமுடைய, சிவ ஸுரேச க்ருசாநு தர்ம ரக்ஷ: அம்புநாத பவமாந தநாதி நாதா: = சிவன் இந்திரன் அக்நி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் என்ற தேவர்கள், பத்த அஞ்ஜலி ப்ரவிலஸந்

= கூப்பிய கைகளால் விளங்குகின்ற, நிஜ சிரஷ தேசா: = தமது தலையையுடையவர்களாய், ஸந்தி = இருக்கின்றனர். ஸ்ரீவேங்கடா - ஸுப்ரபாதம்.

(க) திருவேங்கடநாதா சிவன் இந்திரன் முதலிய திக்பாலகர்கள் எண்மரும் தலைமீது தமது கைகளைக் கூப்பிக் கொண்டு உன் ஸேவைக்காகக் காத்திருக்கின்றனர். உனக்கிது நல்விடிவாகுக.

(வி) சிவன் இந்திரன் முதலாக இங்குக் கூறப்பட்ட எண்மரும் முறையே வடகிழக்கு கிழக்கு தென்கிழக்கு தெற்கு தென்மேற்கு மேற்கு வடமேற்கு வடக்கு ஆகிய எட்டுத் திசைகளையும் காப்பவராவர்.

அஞ்ஜலி: - அம் ஜலயதி = அகாரவாச்யனான திருமாலை நீர்ப்பண்டமாக உருக்குகின்றது = தயையை உடையவனாகச் செய்கின்றது என்னும் காரணத்தால் கைகூப்புதல் அஞ்ஜலி என்று பெயர் பெற்றது. இவ்வஞ்ஜலி மஸ்திஷ்கம் ஸம்புடகம் முதலாகப் பல வகைப்படும். தலைமீது கை கூப்புதல் மஸ்திஷ்கப்ரணமமென்றும் மார்புக்கு நேராகக் கை கூப்புதல் ஸம்புடப்ரணமமென்றும் பிறவும் ஸ்ரீபாஞ்சராத்ராதி சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன. இங்குத் திக்பாலகர்கள் மஸ்திஷ்கப்ரணமம் செய்தார்களென்றபடி. இவர்களது தலைகளுக்கு அலங்காரம் கிரீடமல்ல, அஞ்சலியேயென்பது 'ப்ரவிலஸத்' என்பதனால் காட்டப்பட்டது.

**தாடீஷு தே விஹகராஜ ம்ருகாதிராஜ**
**நாகாதிராஜ கஜராஜ**
**ஹயாதிராஜா: ।**
**ஸ்வஸ்வாதிகார மஹிமாதிக**
**மர்த்த யந்தே**
**ஸ்ரீவேங்கடாசலபதே தவ**
**ஸுப்ரபாதம் ।। 17 ।।**

(ப) தே தாடீஷு = உன்னுடைய விஜயயாத்திரைகளில், விஹகராஜ ம்ருகாதிராஜ நாகாதிராஜ கஜராஜ ஹயாதிராஜா = கருடன ஸிம்ஹம் ஆதிசேஷன் கஜேந்திரன் குதிரை நம்பிரான் என்னுமிவர்கள், ஸவஸவ அதிகார மஹிம அதிகம = தம் தமக்குள்ள உரிமை பெருமைகளில் அதிகத்தன்மையை, அர்த்தயந்தே = வேண்டுகின்றனர். ஸ்ரீவேங்கடா - ஸுப்ரபாதம்.

(க) திருவேங்கடநாயகா நீ படையுடன் வெற்றிக்காகப் புறப்படும் பிரயாணங்களில் கருடன் முதலியோர் ஏறகெனவே தமக்கு ஏற்பட்டுள்ள உரிமை பெருமைகளைக் காட்டிலும் அதிகமான உரிமை பெருமைகளை உன்னிடம் வேண்டிக் கொள்ள வந்துள்ளனர். உனக்கிது நல்விடிவாகுக.

(வி) தாடீ =தண்டயாத்திரை, திக்விஜய ப்ரயாண மென்றபடி. கஜராஜ ஹயாதிராஜ பதங்கள் ஐராவதத்தையும் உச்சைச்சரவஸஸையும் காட்டி, இந்திரனுடைய யானையும் குதிரையுமான அவை அவனதம்பியான (உபேந்திரனான) திருவேங்கடமுடையானுக்கும் உரியனவென்று கொள்ளுதல் தகும்.

கருடன் தொடக்கமான இவ் வைவருக்கும் பகைவரையழித்தற்குரிய அதிகாரமும் மற்றுமுள்ள பெருமைகளும் பகவானால் முன்னமே அளிக்கப்பட்டிருப்பினும், போரில் அவனிட்ட கட்டளையைச் செவ்வனே நிறைவேற்ற அவை போதாவென்று கருதி, வள்ளலான பெருமான்திறத்தில் மேலும் அவற்றை அதிகமாகப் பெறுவதற்காகப் பிரார்த்திக்கின்றனர் என்று கருத்து கூறுவர்.

(தொடரும்)



## இருவகை, மூவகைத் திருக்கோலங்கள் உடைய தலங்கள்:

1) திருகோஷ்டியூர், (சயன, நின்ற, வீற்றிருந்த)
2) திருத்தொலை வில்லிமங்கலம் (இரட்டைத் திருப்பதி) (நின்ற, வீற்றிருந்த திருக்கோலம்)
3) திருநீர்மலை (நின்ற, சயன திருக்கோலம்)
4) திரு பரமேச்சுர விண்ணகரம் (வைகுண்ட பெருமாள் - காஞ்சிபுரம்) (நின்ற, சயன, வீற்றிருந்த திருக்கோலம்)
5) திருப்புல்லாணி (சயன, நின்ற, திருக்கோலம்)
6) திருவில்லிபுத்தூர் (ஸ்ரீவில்லிபுத்தூர்) (சயன, நின்ற திருக்கோலம்)

திரு. என்.சி. கோபாலன் - சென்னை.



# சிங்கப்பிரான் பெருமை

புலவர் வன்னியப்பன் - கிழத்திருத்தங்கல்.

## முன்னுரை

சென்னை மாநகரில் குரோம்பேட்டை ஆழ்வார் பேட்டை, இராயப்பேட்டை போன்றபல பேட்டைக ளில் சைதாப்பேட்டை என்பது ஒன்று. திருவான்மியூர் ஸ்தல புராணத்தில் 'சதயு' என்ற அரசன் ஆண்டதால் சதயுப் பேட்டை என்பது பின்னால் சைதாப்பேட்டையாக மாறி யது என்று குறிப்பிடப்பட் டுள்ளது. 'சைதன்ய முனி வர்' வழிபட்டு அருள் பெற்ற தால் சைதாபபேட்டை என்று பெயர் பெற்றது என்பர் ஒரு சாரார். 'சையத்' என்ற முஸ்லீம் மன்னன் ஆண்ட தால் சையத்பேட்டை என்பது பின்னால் சைதாப்பேட்டையாக மாறியது என்பர் பிறிதொ ருசாரார். அவன் காலத்தில் கட்டிய மசூதி இன்றும் இருப் பதால் மசூதித் தெரு என்ற பெயரை ஒரு தெரு தாங்கி வரு கிறது என்றும கூறுவர். இப் பேட்டையில பல கோவில்கள அமைந்துள்ளன. காரணீசுவரர என்னும சிவன்கோவில், செங் குந்தக்கோட்டம் என்னும் முரு கன் கோவில், கடும்பாடி என் னும் அம்மன் கோவில், சிங்கப் பெருமாள் கோவில் ஆகியவை.

## பிரசன்ன வேங்கட நரசிம்மர்

சுமதி முனிவரின் அருந்த வத்திற்கு இரங்கிய வடவேங் கடப் பெருமாள் பாரதப்போரில் அருச்சுனனுக்குப பார்த்தசாரதி யாக விளங்கிய நிலையில் திரு வல்லிக்கேணியில் சுமதி முனி வர்க்குக் காட்சியளித்தார். இதே பெருமாள் மீண்டும் சுமதி முனி வரின் வேண்டுகோளுக்கிரங்கி இத்தலத்தில நரசிம்மமூர்த்தியா கப் பிரசன்னமானார். ஆகவே இங்கு எழுந்தருளிய பெருமாளுக் கு ப பிரசன்னவேங்கட நரசிம்ம சுவாமி எனப் பெயர் ஏற்பட் டது. திருவல்லிக்கேணிப் பார்த் தசாரதிப் பெருமாள் சைதாப் பேட்டை திருவிழாவிற்கு ஆண் டுக்கொருமுறை எழுந்தருளுதல் வரலாற்றுத் தொடர்புடைய தாகும்.

## சிங்கப்பிரான் பெருமை

பெருமாளின அவதாரங்கள் பத்து. இவ்வவதாரங்களி னுள்ளே பல தத்துவங்கள் நிறைந்துள்ளன. அடியவர்க ளின் பக்திப்பெருக்கை உலக றியச் செய்வது, அவர்களுக் குச் சோதனையைத் தந்து புடம்போட்ட பொன்னாக மாற் றுவது; அவர்களுடைய பக்தி வைராக்கியத்தை பாமரர்களும் அறியச் செய்வது என்பன திரு மாலின் கருணைத் திறனாகும். அடியார்கள்பால் அருளுதலை 'ஆச்ரித அனுக்கிரக சீலம்' என் றும், அடியார்களின் பகை வர்களை ஒறுத்தலை 'ஆச்ரித விரோத நிக்கிரக சீலம்' என்றும் குறிப்பிடுவர். இவ்விரு சீலங்க ளுக்கும் அடித்தலமாக விளங்கு பவர் சிங்கப் பெருமானேயா வார்.

இக்குறிப்பு அமைய நம்மாழ் வார் அருளிய அரும்பாசுரம் வரு மாறு:

எங்கும் உளன்கண்ணன் என்ற
மகனைக்காய்ந்து
இங்கு இல்லையால் என்று
இரணியன் தூண்புடைப்ப
அங்கு அப்பொழுதே அவன்
வீயத்தோன்றிய என்
சிங்கப்பிரான் பெருமை
ஆராயும் சீர்மைத்தே".

இரணியன் பெருமாளை இகழ்ந்ததால் அவனைத் தண் டித்தார் என்று கூறுவதை விட பெருமாள் தமது அடியா ரைத் துன்புறுத்தியதால்தான் இரணியன் தண்டிக்கப்பட்டான் என்பதே பெரியோர் துணிபு. இதற்குச் சான்றாக பொய்கை யாழ்வாரின் கூற்று இதோ;

"வரத்தால் வலி நினைந்து
மாதவநின்பாதம்
சிரத்தால் வணங்கானாம் என்றே
உரத்தினால்
ஈரரியாய் நேர் வலியோன்
ஆய இரணியனை
ஓரரியாய் நீ இடந்தது ஊன்".

என்ற பாடல் சிந்தனைக் குரியது. இறைவனிடம் இரணியன் வரம் கேட்ட பொழுது தேவர்களாலோ மனி தர்களாலோ மரணம் ஏற்படக்கூ டாது என்று கேட்டதால் பெரு மாள் மனித உடலும் சிங் கத்தலையுடனும் தோன்றினார். பகலிலோ அன்றி இரவிலோ மரணம் ஏற்படக் கூடாது என் பதால் அந்திநேரத்திலும், எந் தவித ஆயுதங்களாலும் மர ணம் கூடாது என்பதால் நகங் களாலும், வானிலோ, அன்றி மண்ணிலோ மரணம் கூடாது என்று கேட்டதால் வாயிற் படியிலும் அமர்ந்து இரணிய னைத் தண்டித்தார். இதைக்கூட பகைவனுக்கு இறைவன் காட் டும் அருட்பண்பு என்று கூற லாம். துஷ்ட நிக்ரகம் சிஷ்ட பரிபாலனம் என்ற இரண்டும்

இறைவனின் இன்றியமையாத பண்புகள்.

"நாட்டோரை உயர்பு கூறினன்
செற்றோரை வழி தபுத்தனன்"

என்பது புறநானூறு. இவ்விரு பண்புகளையும் சிங்கப் பெருமான் இவ்வவதாரத்தில் வெளிப்படுத்தினார்.

"தோற்றக்கேடவை இல்லவன்
உடையான் அவன்ஒரு மூர்த்தியாய்
சீற்றத்தோடு அருள் பெற்றவன்
அடிக்கீழ் புகநின்ற செங்கண்மால்"

என்பது திருவாய் மொழிப் பாசுரம்.

'இரணியன் பக்கல் சீற்றமும், செல்லாநிற்க பிரகலாதாழ்வானுக்குக் கிட்டாலாயிருந்தபடி எங்ஙனே!' என்று சிலர் கேட்க 'சிம்மம் யானை மேலே சீறினாலும், குட்டிக்கு முலை உண்ணலாம்படி இருக்குமன்றே!' என்று எம்பெருமானார் அருளிச்செய்தார். ஆச்ரிய வாத்சல்யத்தாலே அவர்கள் விரோதிகள் மேலே சீறின சீற்றமானால் பின்னை ஆச்ரிதர்களுக்கு அணைய ஒண்ணுதபடி இருக்குமோ! என்று அருளிச் செய்தார். நிக்ரகம், அனுக்ரகம் என்ற இரண்டையும் ஒருசேர நிகழ்த்தியருளிய திறன் சிங்கப் பெருமானுக்குப் பெருமை.

சிங்கப்பிரான் பெருமையை நம்மாழ்வார் கூற்றால் பார்க்கலாம்.

"உன்னைச் சிந்தையினால்
இகழ்ந்த
இரணியன் அகல்மார்பு கீண்ட என்
முன்னைக்கோளரியே! முடியாதது
என்! எனக்கே"

என்பது பாசுரம். இப்பாசுரத்தில் உன்னை இகழ்ந்த இரணியன் என்ற இடத்தில் உன்னைச சிந்தையினால இகழ்நத இரணியன் என்று குறிப்பிட்டிருப்பது நுண்ணிய பொருட்செறிவு உடையது. இறைவன் அன்பர்களுக்கு அருள செயதும், அன்பற்ற கொடியவர்களை ஒறுத்தும் வருகின்றான். இவ்வாறு செய்யுங்கால் அடியார்களின் பேரன்பின திறத்தை எதிர்பார்த்து அருள செய்வதில்லை. 'பொய்யே புகழ்வார் புகழ்ந்தால் அதுவும் பொருளாய் கொள்வோனே!' என்றபடி போலி அன்பிற்கே மகிழ்ந்து இறைவன் இன்னருள் புரிகின்றான். பகைவர்களை ஒழிப்பதிலும் மேலுக்குத் தோன்றுகின்ற பகைமையைக் கொண்டு ஒறுத்து விடுவதில்லை. அவர்கள் உள்ளத்திலும் பகைமை உணர்வு இருக்கிறதா? என்று கண்ட பின்னர்தான் அவர்களை ஒறுக்கிறான். நலம் செய்வதாயின் எதையும் ஆராயாமலேயே செய்யலாம். தண்டிக்கும் நிலை வந்துவிட்டால் தீரத்தெளிய ஆராயந்த பின்னரே தண்டிக்க வேண்டும். 'உளந்தொட்டு இரணியன் ஒண்மார்பு அகலம் பிளந்திட்ட' என்ற பெரியாழ்வார் திருமொழியிலும் 'உளந் தொட்டு' என்றுவருவது இக்கருத்தினை அரண் செயவதாகும்.

## முடிவுரை

இத்தலத்தில எழுந்தருளியிருக்கும் சிங்கப் பெருமான் தன்னை விரும்பி வரும் அடியார்களுக்கு அவர்கள் வேண்டுவதை நல்கி அருள் பாலித்துக் கொண்டிருக்கிறார். அத்துடன் அடியவர்களின் உள்ளத்தில் உள்ள அசுர சக்தியை அழித்து, ஆன்மீக ஒளியைப் பாய்ச்சுகிறார். இத்தகைய பெருமானின் திருவடித் தாமரைகளை வணங்கி வாழ்த்துவோமாக!.

"நாதனை நரசிங்கனை நவின்று
ஏத்துவார்கள் உழக்கிய
பாததூளிபடுதலால் இவ்
வுலகம் பாக்யம் செய்ததே".

(பெரியாழ்வார்)

## தெலுங்கு தேசம்

பெயர்க்காரணம்: த்ரிலிங்க தேசம் என்பது தெலுகுதேசம் என்று மருவலாயிற்று.
த்ரிலிங்கம்: மூன்று லிங்கங்கள்.

1) ஸ்ரீசைலம்.
2) காளத்தி (காளாஸ்திரி, காளேஸ்வரம்)
3) ராக்ஷாலம்.

ஆந்திர தேசம் தொன்று தொட்டு சைவ மகாக்ஷேத்திரமாகவே இருந்து வந்தது. கிருஷ்ணா தேவராயர் காலம் முதலாகவே வைணவ மகா க்ஷேத்திரமாக விளங்கலாயிற்று.
அகரம் முதலாக எழுத்துக்களைக் கற்கத் தொடங்கும் முன்னர் பஞ்சாட்சரத்தையே உச்சரிப்பர்.

### தெலுங்கில் புகழ்பெற்ற சைவப்புலவர்கள்

1) ஸ்ரீபதி பண்டிதர்.
2) மஞ்சனப் பண்டிதர்
3) மல்லிகார்சுனப் பண்டிதர்.

'சதயன்' - காஞ்சிபுரம்.

# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## த

தரைக்கிடை - தரையில் இருப்பு
தரைப்படுகை - சக்தியற்று விழுகை
தரையோர் - பூமியிலுள்ளோர்
தருவடி சாதம் - நைவேத்யத்தில ஒரு பாகத்துப் பெயர்
தல்லி - தாய்
தலக்கற்று - வெட்கம் இல்லாமல்
தலக்கறுக்கும் போது - வெட்கத்தை மாற்றும் போது; உறவறுக்கும் போது
தலசயனம் - 108 திவ்யதேசங்களில் ஒன்று, திருக்கடன்மல்லை
தலை - உயர்ந்தது
தலைஆடி தலையாடி - முதன்மையான வாக்கியம், ஆரம்பம்
தலைக்கட்டு - முடிவு; பூர்த்தி
தலைகுலுக்குகை - அநுமதி பண்ணுகை; ஒப்புக்கொள்ளுகை
தலைக்கட்டான அமுதம் - தலைக்கட்டு-பூர்த்தி, அதாவது ஸாரமான அமுதம்
தலைக்கடை - வாசல்
தலைக்கணம் - மேலான தேவகணம்
தலைக்கணி - தலைக்கு ஆபரணம்
தலைக்காவலிலிருந்தவர்கள் - முதலாளிகள்
தலைக்கொண்ட பின்னை - அதிகமான பின்பு
தலைக்கொள்ளுகை - மீளமுடியாதபடி முறுகு கொளுந்துகை; வயிரம் பற்றுகை- திருடமாகை; அதிசயிக்கை.
தலைக்கொள்ளுப்பாடி - தலைக்காட்ட, மிகுதியாக, தலைபெரும்படி; மேன்மை
தலைகாண வொண்ணாது - எல்லைகாண முடியாது
தலைச்சங்கநாண்மதி - தலைச்சங்காடு என்னும் திவ்யதேசத்தில் கடலில் சந்திரன் உதித்தாற் போலே பரிபூர்ணனாய் குளிர்ந்து நிற்கிற எம்பெருமான்.
தலைச்சாவி வெட்டுகை - பயிர் மதாளித்துப்போனால் நுனிகளை வெட்டு விடுவது; எழுச்சி அறுக்கை.
தலைச்சிறந்து - மிகவும் உயர்ந்ததான, தலைப்பட்ட, சிறப்புடைய
தலைசாடி - தலைசிதறும்படி சாடி
தலைசாய்ப்பது - சிறப்பது
தலைசிறப்ப - அதிகமாக
தலைச்சீய்க்கை - தலையை அசைத்தல்
தலைசீய்க்கும் - வருத்தப்படும்
தலைத்தரம் - பூமியின் சாரம்மிக்க கழனிக்குப் பொருள்; தலையீடு.
தலைத்தலை - மேன்மேலென
தலைத்தலை சிறந்து பூசிப்ப - ஒருவருக்கொருவர், சிறந்து-கிட்டி, பூசிப்ப-அடைந்து-மிகவும் மேல் விழுந்து கொண்டாட
தலைத்தலைப் பெய்தல் - தலையோடு தலைசேர்தல்; மேல்விழுந்து மேல் விழுந்து
தலைத்துகை துகைந்து - தலைக்குத்தல்குத்தி
தலைதுலுக்கு - தலைஅசைத்தல்; இசைவு; சம்மதி
தலைதடுமாறுகை - பகுத்தறிவறுகை
தருக்கிப்பருகுதல் - நெருக்கிப் பருகுதல், செருக்கிப்பருகுதல்
தலைநாகு - தலைச்சங்கன்றுமாடு; முதல்ஈற்று மாடு. அதாவது இளமை மிகுந்தது
தலைநிலாப்போது - தலைநேராக நில்லாத போது, நில்லா-நிலாவாயிற்று
தலைநீர்ப்பாடு - முதல் மடை; ஆரம்பம்
தலைநொந்திடும் - தலையில் நோவு உண்டாகும்
தலைப்பணை - மேல்மரம்
தலைப்பழி - பெரியபழி; தலையான பழி
தலைப்பறை - முன்னே கொட்டுகிற வாத்தியம். மதம் பிடித்த யானையை மேளம் அடித்து அமைதியாக்கிப் பின்பு அழைத்துச் செல்வர்.
தலைப்பெய்திட்டேன் - தலைப்பட்டேன்; ஏற்றுக் கொண்டேன்
தலைப்பெய்து - வந்துகிட்டி; பெற்று, உண்டாக்கா நின்று கொண்டு
தலைப்பெய்தோம் - கிட்டப் பெற்றோம்
தலைமக்கள் - தலைவர்கள்
தலைமகன் - முதன்மையுடைய

வன்; மேன்மையுடையவன்; பரன்; அதிபதி; பெரியவன்

தலைமை - சிறப்பு; மேன்மை

தலைமடாதே - மூழ்காதே

தலைமண்டையிடல் - மிகுதல்

தலைமறியும் - மீண்டும் வரும்; திரும்பும்.

தலைமறை - வேதத்தின் தலையான உபநிடதம்

தலைமிசையாய் வந்திட்டு - முழுமையாக வந்து தோன்றி; ஒருகாரணமின்றி இயற்கையாக வந்து என்றுமாம். தலைமிசை-தலைக்குமேல் என்றாய் முழுவதுமாய் என்றபடி

தலைமுகடு - தலைபாகம்

தலையரங்கம் - 108 திவ்ய தேசங்களில் தலையான திருவரங்கம்

தலையல்லால் கைம்மாறிலேன் - தலையால் வணங்குவது தவிர வேறு கைம்மாறு ஒன்றும் செய்யப்பெற்றிலேன்

தலையழித்து - கர்வத்தை அழித்து; நன்றாக அழித்து

தலையளித்தல் - நன்றாகக் காப்பாற்றுதல்

தலையாலே சுமந்த்து - தடுமாறிப் பரிமாறிற்று

தலையாளன் - அதிபதி

தலையான அமுதம் - நல்ல அமுதம்

தலையான சாந்து- நல்லதோர் சாந்து, சந்தனம்

தலையிடம் - மேலான இடம்

தலையிடமற்று - தலைகாட்டி இடமற்று

தலையினோடாதனம் தட்ட - தலையில் ஆதனம்-தரை தட்டும்படி, தரையோடு தலைதட்டும்படி

தலையுடைத்தாக்கும் வண்ணம் - தலைமைபெறும்படி

தலையுலறி - தலை உதறி

தலைவலித்தான் - முதன்மையானவன்

தலைவலித்தார் - பெருந்தலையார், அதிகாரத்துக்குக் கெடுதல் செய்பவர்

தவ்வை - மூதேவி

தவ நாறுகை - மிகவும் வாசனை கமழுகை

தவர் - வில்; துளை

தவளம் - வெளுப்பு

தவள நகை - புன்சிரிப்பு, மந்தஸ்மிதம்

தவளப்பொடி - தூய்மையான பொடி

தவளமாடம் - வெள்ளியால் செய்தது போல உள்ள மிக வெளுப்பான மாடம்

தவிசு - மெத்தை, படுக்கை

தவிர்கிலோம் - ஓய்கிறிலோம்

தவிராது நின்றவன் - ஒன்றும் நழுவாதபடி பரந்து நின்ற ஸ்வரூபத்தையுடையவன்

தவுதல் - கேடு, சார்வு

தவிருமாகக் கொண்டு - போக்கும் என்று நினைத்துக்கொண்டு

தவிவு - இடையறுகை; ரசம்

தவிவில்சீர் விளக்கம் - இடைவீடில்லாத அழகை உடையொளி. அதாவது சூரியன் முதலான ஒளிகள் என்றபடி

தழல் - நெருப்பு

தழல்நிற வண்ணன் - நெருப்புபோன்ற நிறமுடைய சிவபிரான்

தழல் வாயரசு - சூரியன்

தழலாழி - நெருப்பை உமிழும் சக்கரம்

தழீஇக்கொண்டு - தொட்டுக் கொண்டு

தழிகி - அரைவடம்; அரைநூல் மாலை

தழுத்தொழிந்தேன் - தழு தழுப்பிலே தெரியும் படியானேன். தழதழப்பு-தழதழத்த குரல்

தழுதழுத்த நோக்கு- கலங்கின பார்வை

தழுப்புதல் - தழுவுதல்

தழுப்பரிய சந்தனங்கள் - நான்கு ஐந்து பேர்கள் தழுவினாலும் கைக்கடங்காது வளர்ந்த சந்தன மரங்கள்

தழுவப்பாடுதல் - ஓடுகிற கருத்தோடே கூடப் பொருந்தும்படி பாடுதல்

தழுவல்வினை - தழுவிவிடாதே நிற்கிற கொடிய பாபம்; பின்பற்றும் வல்வினை

தழுவிமுழிசி - நெருக்கி அணைத்து

தழைக்கா - பீலிக்குடைச்சோலை. பீலிக்குடை-மயில்தோகை. கா-சோலை. அது போன்ற சோலை.

தழைக்குடை - தாழை ஓலையால் செய்த குடை

தழை கூறு - தழையில் பாதி-அதாவது சுவையற்ற பொருளில் பாதி.

தழைக்கை - வளருகை

தழையிடுபவன் - திருப்பணி செய்பவன். திருத்துழாய் முதலிய பச்சிலை கொண்டு ஆராதனம் செய்பவன். தழை-பச்சிலை

தள்ளுகை - தடுமாறுகை; தளும்புகை

தணத்தல் - பிரித்தல்

தள்ளம் பாறுகை - தவறுகை

தள்ளுவுதி - வீழ்த்தி, வீழ்த்துவாய், தள்ளுவாய்

தளர்நடை - திருவடிகள் ஊன்றிநடக்கும் பருவமல்லாமல் நடைகற்கும் பருவமாகையாலே தவறித்தவறி நடக்கும் நடை

தளப்பம் - அலைச்சல், மனவேதனை

தளப்பெருமுறுவல் - தளம் - முல்லை, முல்லை

போல பெருமையும் நீட்சி யும உடைய முறுவல, பலவரிசை

தளர்ந்தாரதாவளம - தளர்ச்சியுடையார நசுத்த தருசமான இடம

தளர்வு - பலக்குறைவு

தளவம் - முல்லை

தளரதல் - கட்டுக்குலைதல

தளர்ந்தேன் - இழந்தேன

தளரில்கொலோ - முடிந்தாலோ

தளவேழ முறுவல் - தளம-முல்லை, ஏழஎழுகை யாய் தோற்றுகையாகிற முறுவல்

தளாடிக்காரர் - தலையாரி

தளா - தளர்ச்சி

தளிர்ப்பித்தல - மகிழ்ச்சியடையச் செய்தல; சந்தோஷத்தாலே பூரிக்கச் செய்தல்

தளிரும் முறியும் - பல்லவமும் மொட்டும்

தளிபல - கள்

தளியை - கோவில்; தூறல்

தளை - மொட்டு, கட்டு, சிலம்பு கைவிலங்கு

தளைத்தாமரை - தளையாவது கட்டு, கட்டு நெகிழாமல் முகுளமாகயி ருக்கும் தாமரை

தற்செய்கை - தனது செய்கை தனக்குத் தக்கதாகச் செய்கை

தற்சூழ்தல் - மேல் விழுதல

தற்செல்வம் - வலிமை

தற்பு - மிடுக்கு, உண்மை, ஸ்வபா வம

தற்றெளிகை - தன்னைத் தெளிகை

தற்றோன்றல் - ஸத்தை, தத-உள்ளுறை நிலை, அந்தர்யாமி

தறி - யானைகட்டும் கம்பம்

தறிகை - உளி

தறுகண்மை - பொறுமை. வீரம்

தனக்கேற - தன மனத்திற்கு ஏற்ப

தன்கப்பு - தனக்குக் கிடைத்த இடம

தன கணக்கர - தன்னைப் போல் சீரியராய் இருப்பவர

தன் செல்லாமையாலே - தன் அசக்தியாலே

தன் தனக்கு - தம்பிக்கு, தம்பி தனக்கு. தன் என்பதில் காரத்துக்கு னகாரமாய் தம்பி என் பதை தன் என்று கடைக்கு றையாய் வந்து தம்பி என் றுயிற்று; தானான தனக்கு.

தன்தாமம - பரமபதம்

தன்தேற்றி - தன்னை உள்ளபடி அறி வித்து

தன நம்பி - நம்பி-பெரியவன், தன் அண்ணன்

தன நம்பி நம்பி - தன் தமையனான பலரா மன்

தன்மம - தர்மம்

தன்மபாவம் - தருமமும் பாவமும்

தன்மை - உண்மை, க்ருபை

தன்மையம் - தன்மையாக உடையோம

தன்னிறம - தன இடையாட்டம்

தன்னடிச்சி - தன் அடிமை

தன்னலர்ந்த திருத்துழாய - தன் நிலத்தில் காட் டிலும் வாடாத மிக வும் மலர்ந்ததிருத்துழாய்-வாசனையுடைய திருத்து ழாய்

தன்னளப்பொன்றில்லாதவன் - உபமானம் இல்லாதவன்

தன்னன்ன - தன்னோடுஒத்த

தன்னாக்கி - தனக்காக்கி; தன்னோடு ஒக்கப்பண்ணி

தன்னாயம - தன் தோழிமார்

தன்னாற்றுன் - எல்லாம் செய்தாலும் தான் ஒன்றும் செய்யாதவனாய் இருப்பவன்

தன்னிலம் - தானிக்குமிடம்

தன்னினவாக - தன்னதுகளாக, தன்னுடை யவனாக

தன்னை என்னாக்கி - என்னை தன்னைப் போல் ஆக்கி

தனஞ்சயன் - அருச்சுனன்; காற்று; தீ

தனத்துள்ளான் - தனத்தையும் தனக்கு இருப் பிடமாக உடையவன்

தனமருவு வைதேகி - தனத்தின் அழகுமிக்க வைதேகி. விஷ்ணே ஸ்ரீ: என்கிறபடியே பெரு மாலுக்குச் செல்வமான பிராட்டி

தனமாயதானே கைகூடும் - தனமாக இருக்கிறது எல் லாம் தானே வந்து கைகூ டும் என்றபடி

தனமிகுசோதி - தனக்கு உரியதான ஒளிம யமான பரமபதம்

தனாது - தன்னுடைய

தனிசர் - குறும்பர்

தனிசாளன் - கடனாளி

தனிசுபட்டிருக்கும் - தனிசு-குணம், கடன் பட்ட வனாக நினைத்திருக்கும்

தனித்தடி போடுதல் - வீசிவில்லிட்டு எழுப்புதல்

தனிப்பாகீர் - பாகன்-நடத் தவல்லவன்; ஒப்பற்றதாக நடத்த வல்லவரே என்று விளி

தனி(நி) போட்டுக் கிளப்புதல் - வடிம்பிட்டுத் தாக்குதல்

தனிமாத்தெய்வம் - ஒப்பற்ற பரதேவதை

தனி மாலை - தீட்சை

தனிமுதல் - மூலபிருகிரிதி, எம்பெரு மான்

தனியர் - துணையில்லாதவர்

தனியன் - ஒப்பற்றவன்; சிறப்புப் பாட்டு, ஆழ்வார் அருளிச் செயல் பாடல்களுக்கு முத லில் தனித்து நிற்கும் பாடல் தனியன் தியான ச்லோகமாகும்

தமியாட்டியேன் - தனியாயுள்ள நான்

தனியாழித்தேரார் - சூரியன்

தனை - தன்னை; அளவு

*

# வைணவத் திருப்புகழ்

**திரு. C. பன்னீர்செல்வம் - சென்னை**

## முன்னுரை :

திருப்புகழ் என்றாலே நம் நினைவிற்கு அருணகிரியாரே வருவர். குன்றாடும் குமரனை தேனினிய தமிழால் தேவர் தம் அமிழ்தொத்த திருப்புகழ்ப் பாக்களால் புகழ்ந்து வையம் புகழ் பெருஞ்சிறப்பு பெற்ற வர் அருணகிரியார். சைவ சமயத்தின் ஒப்பற்ற நூலாக அத்திருப்புகழ் கருதப்படுகிறது. அதற்கொப்ப தாள லயத்து டன் இசை இனிமை குன றாது வைணவ அடியாரா கிய மதுரகவி ஸ்ரீனிவாசய்யங் கார் பாண்டிய நாட்டுத் தலங் களுள் உறையும் எம்பெருமா னைப் புகழ்ந்து பாடிய பாக் களே பாண்டிய நாட்டுத் திருப்பு கழ் என்னும் நூலாகும். அது பற்றி இக்கட்டுரையில் காண போம்.

## ஆசிரியர் வரலாறு :

**ஏடுநிலத்தில் இடுவதன் முன்னம்**
**வந்து**
**எங்கள் குழாம் புகுந்து**
**கூடும் மனமுடையீர்கள்! வரம்பொழி**
**வந்தொல்லைக் கூடுமினோ**
**நாடும் நகரமும் நன்கறிய நமோ**
**நாராயணாய என்று**
**பாடும் மனமுடைய பத்தருள்ளீர்**
**வந்து**
**பல்லாண்டு கூறுமினே**

என்று பெரியாழ்வார் வேண டிக்கொண்டபடி ஆழ்வார்களும் ஆசார்யர்களுமன்றி அகிலம் முழுவதும் அளந்த அச்சுத னின் பெரும்புகழைப் பல் லாயிரப் பாக்களால் பாடிக்க ளித்த அடியார்கள் பலர் உண்டு. அவருள்ளும் ஒருவரே மதுரகவி ஸ்ரீனிவாசய்யங்கார். மதுரை மாவட்டத்தின் கம் பம் பள்ளத்தாக்கில் உத்தமபா ளையத்தை அடுத்த அனுமந் தன்பட்டி என்ற சிற்றூரில் வாழ்ந்தவர். "ஒழிவில் கால மெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை" செய்தவர். நாக்கொண்டு மானிடம் பாடாத நாவினர்.

"நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பரிய னாய்" இருக்கும் அப்பிரானை

*அரிய புலனைந்தடக்கியாய மலர்-*
*கொண்டு ஆரவம்*
*புரிய பரிசினால் புல்கில்-*
*பெரியனாய*
*மாற்றது வீற்றிருந்த மாவலிபால்*
*வனைநீர்*
*ஏற்றானைக் காண்ப தெளிது.*

என்று பெரியாழ்வார் கூறுமாப் போல 'அறிவென்னும் தாள் கொளுவி ஐம்புலனும் தம் மில் செறிவென்னும் திணைக்த வம் செம்மி செம்மையாய் உள ளுருகித் தம் நெஞ்சத்தில் செம் பொருளாகிய அவனையே சிந் தித்து ஏற்றம் பெற்ற அடியார். இவர் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள் ஒன்றே பாண்டிநாட டுத் திருப்புகழ்.

பாண்டிய நாட்டுத் திருப்பதி கள் 18 ஆகும். "ஈரொன்பதாம் பாண்டி" என்பார் (நூற்றெட்டு திருப்பதி யந்தாதி. பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்) இத்திவ்ய தேசங்களில் உறைந்து அடி யார்க்கு எளியனாய் அருள்தரும் எம்பெருமானையும் பிராட்டியை யும் இத்திருப்புகழ்ப் பாக்க ளால் போற்றியுள்ளார். குன றமெறிந்த குமரனைப் பற்றிய அருணகிரியாரின் திருப்புகழ்ப் பாக்களைச் சான்றோர் மூன்று பகுதிகளாகப் பிரிப்பர். சின் னபத்தை வெறுப்பன, முரு கப்பெருமான் திருவிளையாடல் களை வியந்து கூறுவன. அத்த லங்களின் பெருமைகளை எடுத் துக் கூறுவன, என அவற்றைப் பிரிப்பர்.

மதுரகவியாரின் திருப்புகழ்ப் பாக்களும் அருணகிரியாருடைய திருப்புகழ்ப் பாக்களைப் போன்று மூன்று பகுதிகளை உள்ளடக்கி யதாக ஒவ்வொரு திருப்புகழ்ப் பாடலையும் பிரிக்கலாம்.

மதுரகவியார் ஒவ்வொரு பாடலிலும் முதலில் சிற்றின்ப மோகம், மாதர் மயக்கம், செல் வம் நிலையாமை, யமபயம் முதலியவற்றையும் இரண்டாவ தாக இவற்றினின்று மீள திரு மால் பெருமையைக் கூறி மூன் றாவதாக தான் பாடப்புகுந்த தலங்களின் சிறப்பையும் கூறு கிறார்.

பாண்டிய நாட்டுத் தலங்கள் பதினெட்டையும் 70 பாடல்க ளில் பாடியுள்ளார். திருமாலி ருஞ்சோலை திருப்பதியை 16 திருப்புகழ்பாக்களில் மிகுதியா கப் பாடியுள்ளார். நவ திருப் பதிகளையும் புகழ்ந்து கூறியுள் ளார். அவ்வெழுபது திருப்புகழ் பாடல்களுள் ஒரு பாடலை இங் குச் சுவைப்போம். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பத மல்லவா?

அறியாக் காலத்துள்ளே உயர் வற உயர்நலம் உடையவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர் நம்மாழ்வார். வேதம் தமிழ் செய்த அருளாளர். ஆழ் வார்களின் ஏகப்பிரதிநிதியாக

விளங்கியவர். அவர் அவத ரித்த திருத்தலம் ஆழ்வார் திரு நகரி என அழைக்கப்படும் திருக்குருகூர் ஆகும். அத்த லத்தைப் பற்றி மதுரகவியார் ஐந்து திருப்புகழ்ப் பாடல்க ளைப் பாடியுள்ளார். அவற்றுள் ஒரு பாடல்:

“வாடேன் ஒருவரிடம் ஈவாய் எனமறுகி
வாழேன் மறலிமுனம் அயர்வாகி
மாயேன் மரணகிடர் கூடேன்
இறுதியுற
மாழேன் நினது கழல் மறவேனால்
வாடா ஒளிமருவு காரே புரையுநெடு
மாலே கரகமல வளையானே
மாரா கவுசலை குமாரா அதிகசுகு
மாரா அனவரத மயரானே

வீடே கருதி வினை நாடார் புரவுமறை
வேரா கனகமய வடிவானே
வீரா சகல அதிகாரா கடலின் ஒரு
மீனா அருள்புரியும் விறலோனே
ஈடேய் புளிநிழலி னோராயிர
மறைகளுள்
ஈவோன் உறைபழன வளமேவும்
ஏழ்மா டியினிலகு ஆழ்வார் திருநகரி
ஏரார் பெறமருவு பெருமாளே”.

‘வாடேன் ஒருவரிடம் ஈவாய்
எனமறுகி......
..........நினது கழல் மறவேனால்’

என்ற அடிகளில் ஒருத்தரி டத்து எனக்குத் தா என்று இரந்து வாழமாட்டேன், யமதர் மன் வரும்போது மனம் தளர்ந்த உயிருக்காக வருந்தமாட்டேன். இறப்புத் துன்பத்தைக் கண்டு நான் அஞ்சமாட்டேன். இறுதிக் காலம் நெருங்கும்போதும் நான் மயங்கேன். ஏனெனில் திரும கள் கேள்வனுடைய செம்பொற் கழலடிகளை நான் மறவாது இருத்தலினால் என்று கூறுகி றார். இவ்வுலகத்தில் பொருள் படைத்தவன் யாரெனில் அது திருமால்தான். அவனிடத்துப் பொருளே பொருள். மற்றவரி டத்துப் பொருளெல்லாம் ஒரு பொருளாகாது. “செங்கண் திரு முகத்துச் செல்வத் திருமாலால்” என்று திருப்பாவையிலும் நாச் சியார் மொழிவார். எனவே இவ்வுலகத்தில் வாழ்கின்ற மற் றவரிடத்து நான் ஒன்று தருக என கேட்கமாட்டேன் என்ற படி,

‘வாழேன் மறலி முனம் அயர்வாகி’
என்றதில்

சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்
இறப்பில் எய்துக எய்தற்க யானும்
பிறப்பில் பல்பிறவிப் பெருமானை
மறப்பொன்றின்றி என்று மகிழ்வேனே

என்ற நம்மாழ்வார் பாசுரத்தின் நயத்தை உணரலாம்.

‘வாடா ஒளி மருவு காரே
புரையு நெடுமாலே’

‘குறையாத சோதியினை உடைய மேகம் போன்ற மேனி உடைய திருவிக்கிரமனே’ நிறங் களுள் அழகானது கருமை நிறம்.

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும்
தடிந்து எழிலி
தான்நல்கா தாகி விடின்.

என வள்ளுவரும் மேகத்தை அழகு எனும் பொருள்படும்படி யான எழிலி என்று கூறினார். பாரதியும் “நிறந்தனிற் கருமை கொண்டான்” என அவன்தன் கருமைநிறத்தைப் புகழ்வார்.

‘கர கமல வளையானே மாரா கவுசலை குமாரா அதிக சுகுமாரா அனவரத மயரானே’

‘தாமரைக் கையில் சங்கு தரித் துக்கொண்டிருப்பவனே மன் மதனே, கௌசல்யா தேவி குமாரனே மிகுந்த மென்மைத் தன்மை வாய்ந்தவனே எப்போ தும் களைப்பில்லாதவனே’ என அவன்தன் திருஉருவ அழகினை யும் கௌசல்யாதேவி அவனை மகனாகப் பெற்றெடுத்த பான் மையினையும் அவனின் சாத் வீக குணத்தையும் அடியார்க ளுக்கு அருள்புரிய எந்நேரமும் தயாராக இருப்பவன் என்றும் அவனின் அருளிச்செயலை” மேனி அழகை வியந்தபடியாம்.

வீடே கருதி வினை நாடார்
பரவுமறை வேரா

வீடு பேற்றினை விரும்பி வினை புரிபவர்கள் ஓதும் மறை களுக்கு வேராக - மூலமாக விளங்குபவனே என்றபடி. இது கருதியே முப்பரம் பொருளிற் குள் முதலலை மூலத்தை என் றனர் மற்றோரும்.

## லட்டு படி சேவா திட்டம்

| வரிசை எண். | சேவையின் பெயர் | தரிசன அனுமதி | கட்டணம் | பிரஸாதம் |
|---|---|---|---|---|
| (1) | ஆர்ஜித லட்டு படி | 5 | ரூ. 2500 | 30 பெரிய லட்டுகள் |
| (2) | ப்ரோக்தம் (சிறிய) லட்டு படி | 5 | ரூ. 750 | 30 சிறிய லட்டுகள் |
| (3) | மாதிரி (மினி) லட்டு படி | 2 | ரூ. 250 | 10 லட்டுகள் |

'கனகமய வடிவானே வீரா
சகல அதிகாரா கடலின் ஒரு மீனா
அருள்புரியும் விறலோனே'

"தங்க மயமான உருவினனே, வீரனே, ஆக்கல் அழித்தல் காத்தல் போன்ற சகல அதிகாரங்களும் படைத்தவனே, கடலில் ஒப்பற்ற மீனமாய் அருளபுரியம வடிவம் உடையானே எல்லாத் தத்துவமும் ஆனவனே" என அவனின சகல பூரண குணதிசயங்களை வியந்தபடி கூறிய தாகும்.

ஈடேய் புளிநிழலி னோராயிர மறைகள்
ஈவோன் உறைபழன வளமேவும்
ஏழ்மாடி யினிலகு ஆழ்வார் திருநகரி
ஏரார் பெற மருவு பெருமாளே.

என்றதில்,

"பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவி மலர்களைக் காணுந்தோறும் பிரான்"

உருவே கண்டு தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகித் தித்திப்ப யானும் எம்பிரானையே ஏத்தினேன் என்று ஆரா அமுதக் கவி ஆயிரம் படைத்த நம் மாழ்வாரையும், அவர் அவதரித்த தலமாகிய ஆழ்வார் திருநகரியையும் புகழ்ந்து பேசும் படிக்கு சிறப்புடையதாகும்.

## முகவுரை :

திடவிசும்பு எரிவளி நீர் நிலம் இவைமிசை படர்பொருள் முழுவதுமாய் வியாபித்திருக்கும் எம்பெருமானைப் போற்றி பாடப்பட்டுள்ள அவ் எழுபது திருப்புகழ்ப்பாக்களும் நம்மால் படித்துப் பாதுகாக்கவேண்டிய பெட்டகமாகும். எனவே அடியார்கள் அனைவரும் அத்தொண்டினைச் செய்து அரங்கனின் அருள்பெறுவோமாக.









(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

'உமைப்ரியன்'

## பதினோராம் அத்தியாயம்

## விஸ்வரூபதர்சன யோகம்



**அர்ச்சுனன் சொன்னது :**

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா
விச்வே அச்விநௌ மருதஸ்
சோஷ்ம பாஸ்ச ।
கந்தர்வயக்ஷாஸுரஸித்தஸங்கா
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஸ்
சைவ ஸர்வே ।। (22)

"உருத்திரர், ஆதித்யர்கள், வசுக்கள், சாத்தியர், விசுவேதேவர், அசுவினி தேவர், மருத்துக்கள், ஊஷ்மபர், கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர் ஆகியோர் கூட்டம் ஆச்சர்யத்தோடு உங்களையே பார்க்கின்றனர்."

[மண்ணுலகமட்டுமின்றி, விண்ணுலக மாந்தர்களும் இறைவனின் கற்பனைக்கெட்டாத உருவமைதிகளைக் கொண்டு விளங்கும் விஸ்வரூப தரிசனத்தைக் கண்டு திகைப்பும் வியப்பும் கொள்கின்றனர்.]

ரூபம் மஹத்தே பஹுவக்த்ர நேத்ரம்
மஹாபாஹோ பஹுபாஹூரு-
பாதம் ।
பஹூதரம் பஹுதன்ஷ்ட்ராகராலம்
த்ருட்வா லோகா: ப்ரவ்யதி
தாஸ்ததாஹம் ।। (23)

"அகன்ற தோள்களை உடையவரே! (பகவானே) பல முகங்கள், கண்கள், கைகள், தொடைகள், கால்கள், வயிறுகள், வளைந்த கோரமான பற்கள் போன்றவற்றை உடைய உங்களுடைய பெரிய உருவத்தைக் கண்டு உலகங்கள் யாவும் பயந்து நடுங்குகின்றன. நானும் அவ்வாறே நடுங்குகின்றேன்."

[மனதில் குழப்பமும், தடுமாற்றமும் உள்ள ஒருவனது மனது விரைவில் உணர்ச்சிகளுக்கு அடிமையாகின்றது. அந்த வகையில் போர் விளைவுகளைப் பற்றி குழப்பம் அடைந்துள்ள அர்ச்சுனனது மனமும் கலக்கத்திற்கு உள்ளாகியுள்ளதால் இறைவனது பேருருவம் அவனுக்குப் பேரச்சம் ஏற்படுத்தியது இயற்கையே.]

நப: ஸ்ப்ருசம் தீப்தமனேக வர்ணம்
வ்யாத்தானனம் தீப்தவிசால
நேத்ரம் ।
த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதி
தாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமம்
ச விஷ்ணோ ।। (24)

"விஷ்ணுவே! விண்ணை முட்டும் உயரம் உயர்ந்து, பல வண்ணங்களுடன் ஒளிவிடுகின்ற திறந்த வாய்களைக் கொண்டும்,

நெருப்பினை உமிழும் வகையில் திகழும் பெரிய கண்களைக் கொண்டும் விளங்குகின்ற உங்களைக் கண்டு கலங்கும் நான், தைர்யத்தையும், மன அமைதியினையும் இழந்து விளங்குகின்றேன்."

[எதிர்பாராத ஒரு சூழ்நிலையை எதிர்கொள்ளும் ஒருவன் அச்சூழ்நிலையுடன் உணர்வாலும், சிந்தனையாலும் ஒன்றுபடும் வரை அச்சம், கலக்கம், அமைதியின்மை, குழப்பம், போன்றவற்றிற்கு உள்ளாவது இயல்பு. இதனைத்தான் நாம் அர்ச்சுனனிடம் காண்கிறோம்.]

*தன்ஷ்ட்ராகராலானி ச தே முகானி*
*த்ருஷ்ட்வைவ காலானல ஸன்னிபானி ।*
*திசோ ந ஜானே ந லபே ச சர்ம*
*ப்ரஸீத தேவேச ஜகந்-நிவாஸ ।। (25)*

"தேவர்களின் தலைவனே! பயமுறுத்தும் கோரைப் பற்களைக் கொண்டு விளங்கும் ஊழித்தீயைப்போல் உங்களுடைய முகங்களைக் கண்ட உடனேயே எனக்கு திசைகள் தெரிய வில்லை. மனயமைதி அடைந்துள்ளேன். உலகத்திற்கு ஆதாரமாக இருப்பவனே எனக்கு அருள் புரிவீராகுக."

[சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவற்றைக் கொண்டுதான் ஒருவரால் திசைகளை அறிய முடியும். ஒளிவீசும் தன்மையுள்ள இவையாவும், இறைவனின் பேரொளியில் மறைந்து விட்டதால், அர்ச்சுனனால் திசைகளை அறிந்து கொள்ள முடியவில்லை. அதனால் குழப்பமும், அச்சத்தின் எல்லைக்கும் சென்று விட்டான். அந்த நிலையில் அவ் இறைவனின் கருணையை எதிர்பார்த்து, அவன் அருளுககாக வேண்டுகின்றான்.]

*அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா*
*ஸர்வே ஸஹைவாவனி பால ஸங்கை: ।*
*பீஷ்மோ த்ரோண: ஸூத புத்ரஸ்த தாஸௌ*
*ஸஹாஸ்மதீயைரபி யோதமுக்யை: ।। (26)*

*வக்த்ராணி தே த்வரமாணா விசந்தி*
*தன்ஷ்ட்ராகராலானி பயானகானி ।*
*கேசித்விலக்னா தசனாந்த்ரேஷு*
*ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்த-மாங்கை: ।। (27)*

"உலகாளும் மன்னர்கள் கூட்டத்துடன் திருதராஷ்டிரனின் பிள்ளைகள் எல்லோரும் பீஷ்மர், துரோணர், சூத புத்திரன் (கர்ணன்) மற்றும் நம்மைச் சார்ந்த சில முக்யமான வீரர்களும் பயங்கரமான கோரைப் பற்களை உடைய உமது வாயினுள் வேக வேகமாக புகுவதையும், பொடிப்பொடியாகிவிட்டத் தலைகளுடன் சிலர் உனது பற்களின் இடுக்கில் அகப்பட்டு விளங்குவதையும் நான் பார்க்கின்றேன்."

[பாரதப்போர் பூமி பாரத்தைக் குறைப்பதற்காகவே நடந்துள்ளது என்பதுபோல் அறிஞர்கள், ஆசார்யர்கள், சான்றோர்கள், வீரர்கள், வல்லுநர்கள் யாவரும் இறுதியில் அழிவதை அர்ச்சுனன் கண்டு, அவ் அழிவை தன்னால் தடுக்க முடியாத ஒன்று என்பதையும் அறிகின்றான்.]

*யதா நதீனாம் பஹவோ அம்புவேகா:*
*ஸமுத்ர மேவாபி முகாத்ரவந்தி ।*
*ததா தவாமீ நரலோக வீரா*
*விசந்தி வக்த்ராண்யபிவிஜ் வலந்தி ।। (28)*

*யதா ப்ரதீப்தம் ஜ்வாலனம் பதங்கா*
*விசந்தி நாசாய ஸம்ருத்வேகா: ।*
*ததைவ நாசாய விசந்தி லோகாஸ்-*
*தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா ।। (29)*

"பெருக்கெடுத்துக் கரைபுரண்டோடும நதிகள் யாவும் இறுதியில் கடலையே சென்றடைவது போல், முப்பக்கமும் தீயினை உமிழும் உமது வாய்க்குள் இந்த உலகத்து வீரர்கள் யாவரும் புகுகின்றனர்."

"அழிவதற்காகவே விட்டில் பூச்சிகள் எரியும் விளக்கில் விரைந்து வீழ்ந்து மடிகின்றன. (அவ்வாறே) இந்த உலகத்து மக்களும் தங்கள் அழிவைத் தேடிக் கொள்ளும் வகையில் உம் வாயினுள் புகுகின்றனர்."

[எரியும் விளக்கில் எவ்வாறு விட்டில் பூச்சிகள் தாமாகவே சென்று வீழ்ந்து மடிகின்றனவோ, அவ்வாறு இவ்வுலக உயிர்கள் தங்கள் வினைப்பயனை அனுபவிப்பதற்காக, தங்கள் அறியாமையால் தாங்களாகவே தங்கள் முடிவினைத் தேடிக்கொள்ளும்வகையில் இறைவனின் வாயில் புகுகின்றனர். அதாவது நிலையாமையை மறந்து மயக்கத்திலாழ்ந்து, போக வாழ்க்கையினை துய்த்திட விரும்பும் அவர்கள், தங்களது உடல் அழிவை மறந்துவிட்டார்கள். அதனால் நல்வினை மறந்து தீவினைகளைத் தொடர்ந்து செய்து கொண்டே இருக்கிறார்கள். அதாவது மீண்டும் மீண்டும் பிறவியிலேயே உழன்று, துன்பம் கொள்ளவே அழிந்து போகின்றனர்.]

லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தால்
லோகான் ஸமக்ரான் வதனைர்
ஜ்வலத்பி:
தேஜோபிராபூர்ய ஜகத்ஸமக்ரம்
பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி
விஷ்ணோ ।। (30)

"வெப்பமுடைய கதிர்களை வீசிடும் உம் வாய்களினால் உலக முழுவதையும் விழுங்கி, எல்லா திசைகளையும் நாவினால் ருசி பார்க்கிறீர். விஷ்ணுவே, கடுமையான உம்முடைய ஒளிச்சுடர்கள் யாவும் வெப்பத்தில் இந்த உலகம் முழுவதையும் சுட்டெரிக்கின்றன."

[விஷ்ணு என்றால் எங்கும் பரந்து உள்ளவன் என்று பொருள். இவ்இறைவன் இவ்வுலக உயிர்களின் மேன்மையின் பொருட்டு மங்கலமாக எங்கும் பரந்து இருப்பது போன்று, இந்த உலக உயிர்களை மயக்கத்திலிருந்து விடுவிக்க கடுமையான வெளிப்பாடுகளுடன் எங்கும் பரந்து உள்ளான். ஏனெனில் அவ்இறைவன் ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும் மூலகாரணன் ஆக விளங்குகின்றான்.]

ஆக்யாஹி மே கோ பவானுக்ர
ரூபோ
நமோ அஸ்து தே தேவவர
ப்ரஸீத ।
விக்ஞாதுமிச்சாமி பவந்தமாத்யம்
நஹிப்ரஜானாமி தவ
ப்ரவ்ருத்திம் ।। (31)

"மிகவும் அச்சமூட்டும் வகையில் திகழும் தாங்கள் யார் சென்று எனக்குக் கூறுங்கள். உம்மைத் தொழுகின்றேன். தேவர்களின் தலைவனே! எனக்கு அருள் புரியுங்கள். எல்லாவற்றிற்கும் ஆதியான உங்களை அறிய ஆவலாக உள்ளேன். ஏனென்றால் உங்கள் செயல்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை."

[எவ்வாறு 'அழகு' ஒரு மனிதனது உள்ளத்தை, சிந்தனையை தடுமாறவைக்கிறதோ, மனதை ஈர்க்கின்றதோ அதேபோன்று, கோரமான பயங்கரமான உருவமைதியும் மனதை சிந்தனையைத் தாக்குகின்றது. பாய்ந்தோடும் அருவிகளைக் கொண்டு விளங்கும் ஒரு பெரிய மலையானது எவ்வாறு கண்ணுக்கும், கருத்திற்கும் விருந்தாக அமைகின்றதோ, நெருப்பினை நெருப்பாற்றினை ஓடவிடும் எரிமலையும் அதே கண்களுக்கும், கருத்திற்கும் அதிர்ச்சியையும், பயத்தையும் உண்டாக்குகிறது. அந்தவகையில் மோகனப்புன்னகையும், அருள் முகமும், அபயக்கரங்களும் கொண்ட பரமனது திருவுருவமும் இன்று போர்க்களத்தில் கற்பனைக்கும் எட்டாதவகையில் அச்சமூட்டும் உருவினைக் கொண்டு திகழ்கின்றது. இவ்வாறு உருவமைதிகளைக் கொண்டு விளங்கும் இறைவனின் உள்ளத்தை அறிய விரும்பும் அர்ச்சுனன், அவ்வாறு அறிந்துகொள்ள முடியாமல், இறைவனை அறிந்து கொள்ள இறுதியில் இறைவனையே சரணடைகின்றான்.]

(தொடரும்)



## அர்ச்சனா அனந்தர தரிசனம்

திருமலைக் கோயிலில் நாளும் நடைபெறும் அர்ச்சனைக்குப் பிறகு அதாவது காலை 5-30 மணி அளவில், ஏழுமலையானைத் தரிசித்திடும் வகையில் 'அர்ச்சனா அனந்தர தரிசனம்' எனும் புதிய ஆர்ஜித சேவை 1-3-96 முதற்கொண்டு ஒரு பரிசோதனை அளவில், புகுத்தப்பட்டுள்ளது. இச்சேவை பற்றிய விவரங்கள் பின்வருமாறு:-

1) கட்டணம் ரூ. 100/- (நபர் ஒருவர்க்கு)

2) இச்சேவைக்கான சீட்டுகளை வாங்கிய பக்தர்கள், அர்ச்சனைக்காக கட்டணம் செலுத்தி பங்கேற்கும் பக்தர்களின் ஏழுமலையானின் தரிசனத்திற்குப் பிறகு, அதாவது காலை 5-30 மணி அளவில் அனுமதிக்கப்படுவர்.

3) இச்சேவைக்காகக் கோயிலில் ஒதுக்கப்படும் கால அளவு சுமார் 30 அல்லது 45 நிமிடங்களேயாகும்.

4) கோயிலில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சிகளின் அவசியத்தைப் பொறுத்து, இச்சேவைக்கான அனுமதி சீட்டுகளின் விற்பனை ஒரு நாளைக்கோ அல்லது சில நாட்களுக்கோ நிறுத்தி வைக்கப்படலாம்.

5) இச்சேவைக்கான அனுமதிசீட்டுகள் நாள் முழுவதும் திருமலை விஜயா வங்கி விற்பனைக்கூடுகளில் விற்பனைக்குக்கிடைக்கும். நாள் ஒன்றிற்கு 750 சீட்டுகள் மட்டுமே விற்கப்படும்.

# திருமால் பக்தரைப் போற்றிய மதுரகவி

புலவர் மு. மணி - வேலூர்.

முகவுரை :

பிறவிகளில் உயர்ந்த பிறவி மானிடப்பிறவி. இம்மானிடப்பிறவியும் துன்பங்கள் பல நிறைந்தது. ஆகவே மானிடர் யாவரும் பிறவி நீங்கிப் பிறவா பேரின்பம் பெற இறைவனை வணங்குதல் வேண்டும்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடிச்சேரா தார்"

என்ற குறட்பாவில் திருவள்ளுவரும் பிறவியாகிய பெருங்கடலைத்
துன்பமின்றிக் கடக்க இறைவனை நாம் வணங்க வேண்டுமென்றும், அவ்வாறு இறைவனை வணங்காதவர் இம்மானுடப் பிறவியாகிய பெருங்கடலைக் கடந்து சென்று மோட்சமாகிய கரையைக் கடக்க இயலாமல் துன்பமடைவர் என்றும் கூறி இருப்பதை அறியலாம்.

திருமாலைப் பாடிப்போற்றி பிறவிப் பெருங்கடலைக் கடந்து வைகுந்தப் பதவியடைந்த திருமால் பக்தர்களில் மிகவும் சிறப்புற்று விளங்கியவர்கள் பன்னிரண்டு பேர்களாவர். இவர்களுள் வைகுந்த வாசனாகிய திருமாலைப் போற்றிப் பாடியவர்கள் பதினொருவராவர். ஆனால் மதுரகவி மட்டும் திருமாலின் சிறந்த பக்தனாகிய நம்மாழ்வாரைப் போற்றிப் பாடிப் புகழ் பெற்றார். மதுரகவியாழ்வாரின் மயக்கத்தைப் போக்கி வைகுந்த வாசனின் மாட்சியினைக் கூறும் தத்துவத்தை விளக்கியவர் நம்மாழ்வாராவார். ஆகவே இவரையே தன் வாழ்க்கையில் நல்வழி காட்ட வந்த தெய்வமாகக் கருதிப் போற்றிப்பாடி வைகுந்தப் பதவி பெற்றார் மதுர கவி. இனி நம்மாழ்வாரைப போற்றிப் புகழ்ந்த மதுரகவியின் வரலாற்றைக் காண்போம்.

## பேரொளி தோன்றல்

வைகுந்தவாசன் மகாவிஷ்ணுவைப் பற்றிக் கூறும் தத்துவத்தை அறிந்துகொள்ள ஆர்வம் கொண்ட மதுரகவியார் பாரததேசம் முழுவதும் சென்று பலரிடம் கேட்டும் பலனில்லாமல் வருந்தினார். அறிஞர் பலரிடம் கேட்டும் இவரது ஐயப்பாடு நீங்காததால் மிகவும் மனம் வருந்தினார். திரும்பி வரும் வழியில் தென் தமிழ் நாட்டில் திருக்குருகூரில் ஒரு மரத்தடியில் போரொளி வீசுவதைக் கண்டார். அம்மரத்தடியில் பதினாறு வயதுடைய சடகோபர் கண்களை மூடிக் கொண்டு தியான நிலையிலிருப்பதைக் கண்டார். நம்மாழ்வாரின் இயற்பெயர் சடகோபர் என்பதாகும். இவர் மனிதரா? தேவரா? இவர்க்கு பார்க்கக் கண்ணுண்டா? பேசவாயுண்டா எனச் சோதிக்க முயன்றார்.

## சடகோபர் பேசுதல்

மதுரகவியார் சடகோபரின் அருகில் சென்று ஒரு சிறு கல்லை எடுத்துப்போட்டார். கல் விழுந்த ஒலிகேட்டுச் சடகோபர் கண்களைத் திறந்து மதுரகவியாரைப் பாரத்தபின்பு கண்களை மூடிக்கொணடார். மதுரகவியாரின உளளம தாமரைபோல மலரந்தது. மகா விஷ்ணுவின் தத்துவத்தைப் பறறிக்கூறும் தத்துவத்தை இவ்விளைஞர் வாயிலாக அறிந்து கொள்ளலாம் என்ற நம்பிக்கை ஒளி மதுரகவியாருக்குப் பிறந்தது. சடகோபரின் அருகில் சென்று "செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்றதொரு வினாவினைக் கேட்டார். மதுரகவியின் வினாவைக் கேட்ட சடகோபர் "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்று பதிலுரைத்தார். தத்துவமான வினாவுக்குத் தத்துவமான விடையைக் கேட்ட மதுரகவி ஊரெங்கும் அலைந்த எனக்கு இவ்விளைஞரின் தத்துவக் கருத்தைக் கூறிவிட்டதால் இவரே தன்னை உய்விக்க வந்த தெய்மாகக் கருதிப்பெருமகிழ்ச்சி கொண்டார். செத்தது என்பது உடம்பைக் குறிக்கும். சிறியது என்பது உயிராகிய ஆன்மாவைக் குறிக்கும். அதாவது உடம்பினுள் உள்ள ஆன்மாவாகிய உயிர் எதை அனுபவித்து எங்கே கிடக்கும் என்பதே மதுரகவியின் கேள்வியின் பொருளாகும்.

"அத்தைத்தின்று" அந்த உடம்பைச் சார்ந்து, இன்ப துன்பங்களை அனுபவித்துக்கொண்டு அங்கே கிடக்கும். அவ்வுடம்பிலேயே ஆன்மாவாகிய உயிர் இருக்கும் என்பது சடகோபர் அளித்த பதிலின் பொருளாகும்.

பிறந்தநாள் முதல் யோகத்தில் இருந்தும், பேசாமலும் இருந்த சடகோபர் வாய்திறந்து பேசிய தையறிந்து வந்த பெற்றோர் தம் மகனைப் பேசவைத்த மதுரக வியைப் பாராட்டினர்.

தன் அருமை மகனான சட கோபரை வீட்டுக்கழைத்தனர் பெற்றோர். ஆனால் பெற்றோ ரின் அழைப்பை ஏற்று வீட டுக்குச் செல்ல மறுத்தார் சட கோபர். உலகிற்கும், மானி டர்க்கும் வைகுந்த வாச னின் பெருமைகளைப் பரப்ப வந்த பக்திச் சுடரை வீட்டுக் குள் வைத்து அடைப்பது நன்றன்று என்று சமாதானப்ப டுத்திச் சடகோபரை இங்கேயே விட்டுச் செல்லுமாறு பெற் றோரை மதுரகவியார் வேண்ட அவரும் சடகோபரை அவ்வாறு விட்டுச் சென்றனர்.

## நம்மாழ்வாரின் சிறப்பு

இவ்வுலகில் பிறந்து பதி னாறு வயதுவரைப் பேசா மல் யோகநிலையிலிருந்து பின் னர் திருமாலின் அருமை பெரு மைகளைப் போற்றிப் பாடிச் சிறப்பு பெற்றதால் சடகோபர் என்ற இயற்பெயருடையவர், நம்மாழ்வார் என்ற சிறப்புப்பெ யரால் வழங்கப்பட்டார். திரு மால் தேவர்களுக்கு மேன் மையுண்டாக அமுதளித்த அரு ளாளன் என்றும், மண்ணில் வாழும் மக்கள் பிறவியைப் போக்க எண்ணினால் இன்ன முதம் அளித்து வைகுந்தப் பத வியும் அருளுவான் என்றும் தன் நூலான "திருவாய்மொழி" யில் பாடியுள்ளார். எப்படியும் வாழலாம் என எண்ணிவாழும் அறிவில்லா மக்களுக்கு, இப்ப டித்தான் வாழவேண்டும் என்று ஒப்பிலா அப்பனாம் கண்ண பிரானின் அருமை பெருமைக ளைத் தன் திருவாய்மொழி நூலின் வாயிலாக வழிகாட்ட நின்றார். மேலும் தன் திரு வாய்மொழிப் பாடலொன்றில் பாடியிருப்பதாவது

"ஒழிவில் காலமெல்லாம் உடனாய்
மன்னி
வழுவிலா அடிமை செய்யவேண்
டும்நாம்
தெழிகுரல் அருவித் திருவேங்க
டத்துள்
எழில்கொள் சோதிஎந்தை
தந்தை தந்தைக்கே"

தம் வாழ்நாள் முழுவதும் அருவி கள் சூழ்ந்த மலையில் கோயில் கொண்டுள்ள திருவேங்கடநா தனைப் போற்றி . அவருக்குத் தொண்டு செய்ய வேண்டும். எங்கும் சோதி வடிவாகவும் என் குலத்திற்கே தந்தையா கவும் விளங்குகின்ற கோவிந் தனை என்றென்றும் வணங்கி வைகுந்தப்பதவி பெற வேண்டு மென்பதே இப்பாடலின் கருத் தாக விளங்குகின்றது.

மேலும் மற்றொரு பாட லில் நம்மாழ்வார் பாடியிருப் பதாவது:

"திரியும் கலியுகம் நீங்கித்
தேவரும் தாமும் புகுந்து
பெரிய கிருதயுகம் பற்றிப்
பேரின்ப வெள்ளம் பெருக
கரியமுகில் வண்ணன் எம்மான்
கடல்வண்ணன் பூதங்கள்
மண்மேல்
இரிய புகுந்திசை பாடி
எங்கும் இடங்கொண்டனவே!!

மக்களுக்குத் துன்பம் கொடுத் துவரும் இக்கலியுகம் சென்ற பின் புதுயுகமாகிய கிருதயுகம் தோன்றும். இந்த இனிய கிரு தயுகத்தில் தேவர்களும், மக்க ளும் ஒன்றுகக்கூடி வாழ்வார் கள். மண்ணுலகும், விண்ணுல கும் ஒன்றாகிவிடும். அனைவ ரும் பேதமின்றி இன்பமுடன் இசைபாடி வாழ்வார்கள். இம் மையிலேயே மக்களனைவரும் மறுமைப் பயனை, தெய்வீகப் பயனை அடைவார்கள். திரு வேங்கடவன் மேகத்தை ஒத்த நிறமுடையவன். நமக்கு இந்த இனிய கிருதயுகத்தை அருளு வான என்பதே மேற்கண்ட பாட லின் கருத்தாகும். கிருதயு கம் இம்மண்ணிலேயே தோன்றி விடுவதால் தேவர்கள் அனை வரும் விண்ணுலகை விட்டு இங்கேயே வந்து தங்கிவி டுவார்கள். வைகுந்தத்தை விட்டு மகாவிஷ்ணுவும் இம் மண்ணுலகு வந்துவிடுவதால் மண்ணுலகும் வைகுந்தமாகிவி டுகிறது. ஆகையால் நாமனை வரும் வேதகீதங்களைப் பாடி அவன் பொற்றாமரையடிகளைப் போற்றி பேரின்ப வாழ்வைப் பெறலாம் என்ற பொதுவுடை மைக் கருத்தை இப்பாடலின் வாயிலாக அறிகிறோம் அல் லவா?

## சடகோபரையே வணங்குதல்

தன் வாழ்வுக்கு ஒளிகாட்டிய திருக்குருகூரில் வாழும் சடகோ பரையே தெய்வமாக வணங் கினார் மதுரகவி. வயதில் மூத்தவராகிய மதுரகவி தன் னைப் பெரிய பரமபதத்தை எய்தும் நற்பாதைக்கு வழிகாட் டிய சடகோபரையே சான்றோ ராகக் மதித்து சரணாகதிக்கு ரிய தெய்வமாகவும் போற்றி வணங்கினார் மதுரகவி. 'என மனத்துன்பத்தைப் போக்கி என் மனத்தைக் கயிற்றால் பிணைத்து எனக்கு நன்மாராக கம் காண வழிகாட்டிய சடகோ பரை நெஞ்சகம்பால் நிறுத்தி எவ்விடத்தும் நான் பாடித்திரி

வேன். கரிய திருவுருவுடைய மாயவனை நான் சடகோபரின் வாயிலாக அறிவேன். திருக்குருகூரில் வாழும் இச்சடகோபரின் வழியாகவே திருமாலையறிந்து அவனடிகளைப் போற்றிப் பயன்பெறுவேன்' என்பதைக் குறிக்கும் பாடலாவது.

'கண்ணிநுண் சிறுத் தாம்பினால்
கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன்
என்னப்பனில்
நண்ணித் தென்குருகூர்நம்பி
யென்றக்கால்
அண்ணிக் கும்அமுதூறும்
என்நாவுக்கே!

மேலும் அடியார்க்குக் கட்டுப்பட்டவன் மாயவன் என்பதையும், சடகோபரின் பெயரை நினைத்தாலே என்மனத்தில் சாவா மருந்தான அமுதம் தோன்றி நாவில் இனிப்புச் சுவை தோன்றுவதாகவும் மதுர கவியாழ்வார் பாடியிருப்பதை அறியலாம்.

மதுர கவியாருக்குத் தான் காணும் எல்லாப் பொருள்களும் நம்மாழ்வாராகவே தோன்றியது. நுண்ணுணர்வுடைய அந்தணர்போல விளங்கி எனக்கு வேதத்தின் உட்பொருளை விளக்கி என்றும் நெஞ்சில் நிலைத்திருக்குமாறு செய்த சடகோபரையே நான் சரணடைந்தேன். அவருக்கு நான் அடிமையானேன். அவரால் நான் அற்புதப் பயன்கள் அடைந்தேன். அவர்மீது நான் அளவிலா அன்புகொண்டுள்ளேன் என்பதை விளக்கும் மதுரகவியாழ்வாரின் பாடலாவது:

"மிக்க வேதியர் வேதத்தி
னுட்பொருள்
நிற்கப் பாடிஎன் நெஞ்சுள்
நிறுத்தினான்
தக்க சீர்ச்சட கோபனென்
நம்பிக்கு-ஆட்
புக்க காதல் அடிமைப்
பயனன்றே"

இப்பாடலின் வாயிலாக மதுர கவிக்குச் சடகோபர் மீதிருந்த அளவில்லாத பக்திச் சிறப்பினைக் காணலாம். மதுரமான பாடல்களைப் பாடியதாலும் நம்மாழ்வாரை வணங்கியதாலும் ஆழ்வார் என்னும் அடைமொழி சேர்த்து மதுர கவியாழ்வார் எனச் சிறப்புப் பெற்றார்.

## முடிவுரை :

திருவாய்மொழியின் வாயிலாகத் திருவேங்கடவன் மீது பல பாடல்களைப் பாடியவர் நம்மாழ்வார் என்னும் பக்தர். இவருக்குப் பக்தராகயிருந்து கொண்டு அவரையே தெய்வமாகப் பாடி "திவ்வியப் பிரபந்தம்" வாயிலாகப் பல பாடல்களைப் பாடினார் மதுரகவியாழ்வார். நம்மாழ்வார் இருக்குமிடமே மதுரகவியாழ்வாருக்கு வைகுந்தம் போலவே விளங்குவதாக இவரது பாடல்கள் கூறுகின்றன. மதுரமான சொல் பலகொண்டு பாடியுள்ள தம் பாடல்களைப் பாடுபவர்கள் திருமாலின் வைகுந்தமும் இலக்குமி கடாட்சமும் பெற்று இன்புற்று அனைவரும் வாழ்வர் என்று இவரது பாடல்களால் அறியலாம். மதுரகவியாழ்வாரின் இனிமையான பாடல்களைப் பாடி நாமும் திருவேங்கடவன் பேரருளைப் பெற்று பெருவாழ்வு பெறுவோமாக!!

******************

## கிருஷ்ண பரமாத்மாவின் 8 பட்டமகிஷிகள்

ருக்மணி, மித்திரவிந்தை, சத்தியை, ஜாம்பவதி, ரோகிணி, சுசீலை, சத்தியபாமை, லக்ஷ்மணை என்பவர்கள் கிருஷ்ணனின் பட்டமகிஷிகள்.

கிருஷ்ணனின் பிள்ளைகள் பிரத்தியுமனன், சாருதேஷ்ணன், சுதேஷ்ணன், சாருதேகன், சுதேனன், சாருகுப்தன், பத்ரசாரு, சாருவிந்தன், சுசாரு, சாரு என்ற 8 பிள்ளைகளும், சாருமதி என்ற ஒரு பெண்ணும் ருக்மணியின் குழந்தைகள்.

பிரத்தியும்னன் ருக்மி என்ற தன் மாமனின் மகளை மணம் செய்து கொள்ள அநிருத்தன் என்ற பிள்ளை பிறந்தது. இவன வளர்ந்து ருக்மியின் பேத்தியை மணம் புரிந்து கொண்டான். அவனுக்கு வஜ்ரன் என்பவன் மகன்.

பாண்டவர்கள் பேரனான பரீக்ஷித்துவுக்கு அஸ்தினாபுரத்தில் ராஜ்யப்பட்டாபிஷேகம் செய்வித்து வனம் சென்றார்கள். அதுபோல க்ருஷ்ணர் பரமபதம் எய்திய பின்பு வஜ்ரன் என்ற அவரது கொள்ளுப் பேரன் எஞ்சிய யாதவர்க்கு அரசனாக முடிசூட்டப்பட்டான்.

துவாரகை நீரில் மூழ்கியவுடன் வஜ்ரன் 'இந்திரப் பிரஸ்தம்' சென்று அர்ஜுனனால் யாதவரின் அரசனாக நியமிக்கப்பட்டான்.

திருமதி. R. ராஜலெக்ஷ்மி - திருச்சி.

# நம்மாழ்வார் மீது இருபத்திநான்கு போர்வைகள் போர்த்துவதின் தத்துவம் என்ன?

திரு. ஜீ. வரதராஜுலு - சென்னை.

திருநெல்வேலி மாவட்டத்தில் ஆழ்வார் திருநகரியில் பிறந்தவர் நம்மாழ்வார். இதற்குத் திருகூர் என்று பெயர். 'மாறன்' என்று பெற்றோர் சூட்டிய பெயருடன் கோவில் திருச்சுற்றில் உறங்காப்புளியமரத்தின் அடியில் பதினாறு ஆண்டுகள் வளர்ந்தவர். தலயாத்திரை சென்ற மதுரகவி ஆழ்வார் தம் முன்தோன்றிய சோதியைப் பின்பற்றி வந்து ஆழ்வார் திருநகரி அடைந்தார். சற்குருதரிசனம் பெற்றார். நம்மாழ்வாரைப் பாடித் துதித்தார். நான்கு மறைகளின் சாற்றைத் திவ்ய பிரபந்தமாக நம்மாழ்வார் தந்தார். நம்மாழ்வார் மங்களாசாசனம் பெற்ற திருப்பதிகள் முப்பத்தைந்து.

நம்மாழ்வாருக்கு விஷ்ணு ஆலயங்களில் நடந்தேறி வரும் சாற்றுமுறை உற்சவத்தில் நம்மாழ்வாருக்கு இருபத்திநான்கு போர்வைகளையும் போர்த்தி, அதன்பிறகு நம்மாழ்வாரை பெருமாளுக்கெதிரில் கொண்டு வந்து நிறுத்துவார்கள். தூபம் காட்டியபிறகு, ஒவ்வொரு போர்வையாக போர்த்தியிருந்த இருபத்திநான்கு போர்வைகளையும் எடுத்தபிறகு ஆழ்வார் மீது எந்த ஆடையும் இல்லாமல் நிர்வாணமாய் இருப்பார். பிறகு அந்த நிர்வாண விக்ரகத்தைக் கொண்டு போய் பெருமாள் திருவடியில் சாஷ்டாங்கமாக நமஸ்கரிப்பது போல் படுக்கவைப்பார்கள். இவ்வாறு படுக்க வைத்தபிறகு, நம்மாழ்வார் சரீரமெல்லாம் தெரியாமலிருக்கும்படி திருத்துளாவினால் மூடி பெருமாளுக்குக் கற்பூர ஆராதனைக் காட்டுவார்கள். இப்போதும் ஸ்ரீரங்கத்திலும், ஸ்ரீஆழ்வார் திருநகரியிலும், ஸ்ரீகாஞ்சி முதலிய ஷேத்திரங்களில் இப்படிப்பட்ட உற்சவங்கள் நடத்தி வருகின்றனர்.

நம்மாழ்வார் என்பவர் மாய சொரூபமாகிய இருபத்துநான்கு தத்துவங்களுடன் மூடப்பட்டிருக்கின்றார். இந்த இருபத்திநான்கு போர்வைகளைப் போரத்துவதின் காரணம், இந்த ஆழ்வாரானவர் மோக்ஷமடைய பரிபக்குவம் சமீபத்து விட்டபடியால், இவரை மூடிக்கொண்டிருக்கும் மாயசொரூபமாகிய இருபத்து நான்கு தத்துவங்களையும், ஒவ்வொரு தத்துவங்களாய் களைந்து கொண்டே வந்த பின் கடைசியில் நம்மாழ்வாரை மூடிக்கொண்டிருந்த எல்லாத்தத்துவங்களும் ஒழிந்துவிட்டபிறகு, இருபத்தைந்தாவது தத்துவமாகிய ஜீவாத்மாவே நம்மாழ்வார் சொரூபம். அந்த இருபத்தைந்தாவது தத்துவமாகிய பரமாத்மா சொரூபத்தில் சேர்ப்பதற்காக நம்மாழ்வாரை, நிர்வாணமாகக்கொண்டு போய் பெருமாளின் பாதத்திடம் படுக்க வைத்து, அவர் சரீரம் தெரியாமல் இருக்கும்படி துளசி தளத்தால் சரீரத்தையெல்லாம் மூடி கற்பூர ஆரத்தி காட்டியவுடன் நம்மாழ்வார் ஜீவாத்மாவானது, கற்பூர ஜோதியாகி விட்டது என்று உலகத்தார் தெரிந்து கொள்வதற்காக தான் இந்த நம்மாழ்வார் உற்சவத்தை செய்து காட்டுகின்றார்கள். இதுதான் நம்மாழ்வார் மீது போர்த்தப்பட்டிருந்தும் 24 போர்வைகளின் தத்துவங்கள்.*

## பாலாஜி அர்ச்சனை திட்டம்

நன்கொடை ரூ. 6000/-. 5 ஆண்டுகளுக்கு வருடத்தில் ஒருமுறை, நன்கொடையாளர் பெயரில் இறைவனுக்கு அர்ச்சனை நடத்தப்படும். அர்ச்சனைக்கான நாளினை நன்கொடையாளர் அறிவித்தல் வேண்டும். எந்த ஆண்டாயினும், கேட்டுக்கொள்ளப்படும் நாள் வெள்ளிக்கிழமையாக அமைந்தால் அதற்கு அடுத்தநாள் இச்சேவை நடத்தப்படும்.

வசதிகள் :-

(1) அர்ச்சனை நடைபெறும் நாளன்று நன்கொடையாளர்க்கு இலவச தங்குவசதி அளிக்கப்படும்.
(2) இவ்அர்ச்சனை சேவைக்கு 3 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.
(3) சுப்ரபாத சேவைக்கும், சிறப்பு நுழைவு தரிசனத்திற்கும் மூன்று நபர்கள் அனுமதிக்கப்படுவர்.

அன்பளிப்பு: மேல் உத்தரீயம், இரவிக்கத்துண்டு, ஒரு சிறிய லட்டு, ஒருவடை.





# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD)

**(FREE HOME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503

*"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"*

**வணக்கம்**

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர் - பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்கள், கடந்த 15 வருடங்களாக அளித்து வரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆசரமத்தில் சுமார் 75 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி, அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறுர்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருத்துவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணிக்க உத்தேசித்துள்ளோம்.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோரகள் மற்றும் பார்வையற்ற குழைந்தைகளுக்கு தினந்தோறு மூன்று வேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருப்பதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அன்னதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும் ஒரு நாளில் (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுக்கும் ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப் பெற வேண்டுகிறோம்.

அன்னதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் ஸ்ரீ ஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிச்சலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G) vide Hqrs. No. 1 (118) VJA/95-96. Valid upto 31-3-98.

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE, என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்." ஸ்வாமி விவேகானந்தா.

நாராயண ஸேவையில்
K.S. ஆசார்யா
Founder / President

நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

# நாலாயிரத்தில் நற்பறவைகள்

திரு. ஆர்.டி. சாரி - கோம்பூர்.

## பறவையினங்கள் : குலசேகராழ்வார்

ஊனேறு செல்வத்துடற்பிறவியான் வேண்டேன் என்று தொடங்கி பாடும் பத்து பாசுரங்களில், திருவேங்கடமலைத் தொடர்பு வேண்டு பாடுகின்ற குலசேகராழ்வார்,

"ஊனேறு செல்வத் துடற்பிறவி
யான் வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத்
திறமல்லால்
கூனேறு சங்கம் இடத்தான்
தன் வேங்கடத்து
கோனேரி வாழும் குருகாய்ப்
பிறப்பேனே"

என்று பாடுகிறார்.

**இந்தப் பத்துப் பாடல்க**ளிலும் குருகாகவும், மீனாகவும், செண்பகமாகவும், தம்பகமாகவும், பொற்குவடாகவும், கானாறாகவும், படியாய் ஆகவும், பொனமலைபோல் ஏதேனும் ஆவேனே என்ற கூற்றுகளில் திருவேங்கடத்தான் பால் இவர் கொண்டுள்ள பற்றும் பக்தியும், இயற்கையோடு இணைந்து வாழ்கின்ற வாழ்வு வேண்டும் என்ற ஆவலும் மிளிர்கின்றன.

மையலால் அத்தனை படைசூழ கண்ணன் வரும் காட்சியை, கண்டால் மனம் கரையாதோர் உண்டோ? குலசேகராழ்வாரும் இதற்கு விதிவிலக்கல்ல.

## திருமங்கையாழ்வார் :

திருமங்கையாழ்வார் திருநறையூரைப் பாடுகையில்,

"பொறியார மஞ்ஞை பூம்பொழில்
தோறும் நடமாட
நறுநாண் மலர்மேல் வண்டிசை
பாடும் நறையூரே" என்றும்,

"பொந்தில் வாழும் பிள்ளைக்
காகிப் புள்ளோடி
நந்துவாரும் பைம்புனல் வாவி
-நறையூரே" என்றும்,

"கொள்ளைக் கொழுமீன் உண்குரு
கோடிப் பெடையோடும்
நள்ளக் கமலத்தேறல் உருக்கும்
நறையூரே"

என்றும் பாடுகின்றார்.

திருநறையூர் எம்பெருமானை 7ஆம் பத்தில் பாடும்போது,

"புன்னாய ஏனமுமாயப் புகுந்து
என்னை யுள்ளங்கொண்ட கள்வா"

என்கின்றார்.

திருவழுந்தூர் இறைவனைப் பாடும்போது,

"நீரில் பணைத்த நெடுவாளைக்
கஞ்சிப்போன குருகினங்கள்
ஆரல் கவுளோ டருகணையும்
அணியார் வயல்சூழ்
அழுந்தூரே" என்றும்,

இன்னொரு பாசுரத்தில்,

"புள்ளுப் பிள்ளைக் கிரைதேடிப்
போன காதல் பெடையோடும்"

என்றும் பாடுகின்றார்.

பொன்னி பாயந்த வயல்களில் கயல்கள் துள்ளி விளையாடும் திருக்கண்ணபுரத்தைச் சிறப்பிக்கும் பாசுரத்தில்,

"கூரார் ஆரல் இரைகருதிக்
குருகு பாயக் கயலிரியும்
காரார் புறவில் கண்ணபுரத்து"

என்று பாடுகின்றார்.

மாயனை அழைக்க பறவைகளை அழைத்துப் பாடும் பாடல்களில்,

"குன்றமெடுத்து மழை தடுத்து
இளையாரொடும்
மன்றில் குரவை பிணைந்த மால்
என்ன மால் செய்தான்"

என்று பாடுகின்றார்.

## நம்மாழ்வார் :

நம்மாழ்வார் பாடுகையில்,

"கண்களால் காண வருங்கொலென்
றாசையால
மண்கொண்ட வாமனன் ஏற
மகிழ்ந்து செல்
பண்கொண்ட புள்ளின் சிறகொலி
பாவித்து
திண்கொள்ள வோர்க்கும் கிடந்தென்
செவிகளே" என்றும்,

மற்றொரு பாசுரத்தில்,

"தக்கிலமே கேளீர்கள் தடம்
புனல்வா யிரைதேரும்
கொக்கினங்காள் குருகனங்காள்
குளிர்மூழிக்களத் துறையும்"

என்று பாடுகின்றார்.

### கிளி

## ஆண்டாள் :

நாச்சியார் திருமொழியில 'சீதரனிருந்துழிச் செலுதத்துவீர என்ன' என்று கலைநயத்துடன் கூடிய ஆண்டாளின 10 பாசுரங்களில்,

"கூட்டிலிருந்து கிளியெப்போதும்
'கோவிந்தா! கோவிந்தா!'
என்றழைக்கும்

ஊட்டுக்கொடாது செறுப்பனாகில்
'உலகளந்தான்' என் றுயரக் கூவும
நாட்டில் தலைப்பழி யெய்தியுங்கள்

நன்மையிழந்து தலையிடாதே
ஆட்டுயர் மாடங்கள் சூழ்ந்து-
தோன்றும்
துவரா பதிக்கென்னை
யுய்த்திடுமின்"

என்று பாசுரம் ஒப்பற்றப் பாசுரம்.

திருப்பாவையில் 15ஆவது பாடலில்,

"எல்லே இளங்கிளியே இன்னம்
உறங்குதியோ
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்
போதர்கின்றேன்"

'எல்லே, சங்கொடு சக்கரம் ஏந்தும் பங்கயக் கண்ணனைப்பாட எல்லோரும் எல்லே' என்கின்றார்கள். 'வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்கு வல்லானை மாயனைப்' பாடிய இந்தப்பாசுரத்திலே வலிய குவளையாபீடம் என்னும் யானையைக் கொன்றவனை, விரோதிகளான கம்சன், சாணூரன், முஷ்டிகன் ஆகியோர்களை விரோதம் போகும்படி மாற்ற செய்த அழகிய வல்லவனை கர்ண குண்டலங்களை உடையவனைப் பாடவாரீர் என்று அழைக்கிறது இந்தப் பாசுரம்.

## திருமங்கையாழ்வார் :

திருமங்கையாழ்வார் உடன் போக்கில் சென்ற தலைமகளைக் குறித்து தாய் இரங்கும் பாடல்களில்,

"முற்றிலும் பைங்கிளியும் பந்தும்
ஊசலும் பேசுகின்ற
சிற்றில்மென் பூவையும்விட்
டகன்றசெழுங் கோதைதன்னை"

என்று பாடுகின்றார்.

திருநாங்கூரத் திருத்தெற்றியம்பலம் செங்கண்மாலைப் போற்றுகின்றபோது,

"மான்போலு மென்னோக்கின் செய்ய
வாயார
மரகதம் போல் மடக்கிளியைக்
கைமேல கொண்டு
தேன்போலும் மென்மழலை பயிற்றும்
நாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென்
செங்கண்மாலே!"

பிரிவாற்றாமையால் தலைவி கூறுவது போன்ற பாசுரத்தில,

"பந்தோடு கழல்மருவாள்;
பைங்கிளியும்
பாலூட்டாள்; பாவை பேணாள்"

என்று பாடுகின்றார்.

திருச்சிறுபுலியூர் எம்பெருமானைப் பாடுகின்றபோது,

". . . . . . . . . . கிளிமாவார்
செவ்வாய்மொழி பயிலும்
சிறுபுலியூர்ச்சல சயனத்து
ஐவாய்அர வணைமேலுறை அமலா!"

என்று பாடுகின்றார்.

மாயனை அழைக்கப் பறவைகளை அழைத்துப் பாடுகின்ற பாசுரத்தில் பாடுவதாவது:

"சொல்லாய், பைங்கிளியே
சுடர் ஆழி வலனுயர்த்த
மல்லார் தோள்வட வேங்கடவன்வர
சொல்லாய், பைங்கிளியே!

## நம்மாழ்வார் :

இராவணாந்தகன் அழிவுக்குக் காரணம் சீதைப்பிராட்டியை சிறைப்பிடித்துச் சென்றதே. இராமகாதையை நம்மாழ்வார் பாடுகையில், சீதையை "கிளிமொழியாள்" என்கின்றார்.

"தளிர்நிறத்தால் குறைவில்லாத்
தனிச்சிறையில் விளப்புற்ற
கிளிமொழியாள் காரணமாக்
கிளரரக்கன் நகரெரித்த"

என்கின்றார்.

திருக்கோளூர் வைத்தமாநிதி இறைவனைத் துதித்துப் பாடும் நம்மாழ்வார் பாசுரத்தில்,

"பூவை பைங்கிளிகள் பந்து
தூதை பூம்புட்டில்கள்
யாவையும் திருமால்
திருநாமங்களே கூவியெழும்என்
பாவைபோயினித் தண்பழனத்
திருக்கோளூர்க்கே
கோவைவாய் துடிப்பமழைக்
கண்ணொடென் செய்யுங்கொலோ"

என்ற பாடல் உயர்ந்த தத்துவப் பாடலாகும்.

புள்ளினங்களைத் தூதுவிடும் 6ஆம் பத்து 8ஆம் திருவாய்மொழி பாசுரங்களில்,

"கையமர் சக்கரத்து என்கனிவாய்ப்
பெருமானைக் கண்டு
மெய்யமர் காதல்சொல்லிக் கிளிகாள்
விரைந்தோடி வந்தே" என்றும்,

"பூங்கட்டு யானுரைக்கேன் வம்மின்
யான் வளர்த்த கிளிகாள்"

என்றும் பாடுகின்றார்.

9ம் பத்து 5ம் திருவாய்மொழியில்,

"நன்செந்நிற நான் வளர்த்த
சிறுகிளிப் பைதலே
இன்குரல் நீமிழற்றேல்
என்னாருயிர்க் காகுத்தன்"

என்று பாடுகின்றார்.

கோயிலடி அப்பக்குடத்தான் என்று வழங்கும் திருப்பேர் நகரைப் பாடுகின்ற போது,

"கிளிதாவிய சோலைகள்சூழ்
திருப்பேரான்
தெளிதாகிய சேண் விசும்பு தருவானே"

என்கின்றார்.

## திருமங்கையாழ்வார் :

திருநெடுந்தாண்டகத்தில் திருமங்கையாழ்வாரின் பாசுரம்,

"முளைக்கதிரைக் குறுங்குடியுள்
முகிலை, மூவா

மூவுலகும் கடந்தப்பால்
முதலாய் நின்ற
அளப்பரிய ஆரமுதை யரங்கம்மேய
அந்தணனை யந்தணர் தஞ்
சிந்தையானை
விளக்கொளியை மரதகத்தைத்
திருத்தண் காவில்
வெஃகாவில் திருமாலைப்
பாடக் கேட்டு
வளர்த்ததனால் பயன்பெற்றேன்
வருக" வென்று
மடக்கிளியைக் கைகூப்பி
வணங்கினாளே!

ஆபத்தில உதவி செய்த திருநாமங்களைக் கிளி சொல்லிற்று. "தலைவி அடியெடுத்துக் காட்டத் திருநாமங்களைச சொன்னோம். இதனால் தலைவிக்கு மோகம் பெருகியது. நாம் இவள் முன்பு தெளிந்த காலத்தில் கற்பிதத திருநாமங்களைச் சொல்லுவோம்" என்று கிளி சொல்ல, இவள் அதற்கு அஞ்சலி செய்து வணங்கினாள். "வளர்த்ததனால் பயன் பெற்றேன்" என்று தலைவி கிளிக்குக் கற்பித்தத் திருநாமங்கள் இவ்வாறன கருத்துடையன. உதிக்கின்ற பால சூர்யனைப்போன்றவன்; மேகத்திற்குச் சமமானவனாய்த் திருக்குறுங்குடியுள் எழுந்தருளியிருப்பவன்; நித்யமாய், மூவகைப்பட்ட ஆத்மவர்கத்துக்கும் அப்பாற்பட்டவனாய், உபய விபூதிக்கும் காரணமாய் விளங்குபவன் ஸ்வரூப ரூப குணங்களால் அளவிட முடியாதவனாய் அமுதக் கடல் போலே வியக்கத்தக்க இன்பத்தைத் தரக்கூடியவன்; திருவரங்கத்திலே திருக்கண் வளர்ந்தருளும் பரிசுத்தன்; பரிசுத்தரானவர்களது மனத்தில் நித்யவாஸம் செய்பவன்; விளக்குள் ஒளி போல விளங்குபவன்; மரகதம் போலே குளிர்ந்த வடிவுடையவன்; பச்சை வண்ணன்; திருத்தணகாவில உறைபவன; திருவெஃகாவில கணவளர்ந்தருளுபவன; இவவாறு திருமகள வல்லபவனான ஸர்வேச்வரனைக் கிளி பேரன்பாலும், பெருமகிழ்ச்சியாலும் பாடக் கேட்ட தலைவி, 'உன்னை வளர்த்ததால் உண்டான பலனைப் பெற்றேன்; இங்கே வருவாய்' என்றழைத்து, லஜ்ஜையோடு அமர்ந்த கிளியை அஞ்சலி செய்து அதன் காலில் விழுந்தாள்.

முற்றும்.



## தினசரி உத்ஸவங்கள்

| | |
|---|---|
| 1) கல்யாணோத்ஸவம் | ரூ. 2500/- காலை 10 மணிக்கு. 5, நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : இரவிக்கைத்துண்டு, உத்தரீயம், பெரியலட்டு 5, வடை 5, அப்பம் 5, தோசை 5, சர்க்கரைப் பொங்கல், பொங்கல், புளியோதரை, தத்யோதனம், (ஒவ்வொன்றும் 1/16 சோலா அளவு.) |
| 2) சிறப்பு கல்யாணோத்ஸவம் | ரூ. 750/- காலை 10 மணிக்கு. 2 நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : உத்தரீயம் ஒன்று, இரவிக்கைத்துண்டு ஒன்று, பெரியலட்டு, 1 வடை 1 |
| 3) ஆர்ஜித பிரமோத்ஸவம் | ரூ. 500/- (நாள் ஒன்றிற்கு) மதியம் 1 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். தரப்படும் வாகனங்கள் : (1) பெரிய சேஷ வாகனம், (2) வெள்ளி கருட வாகனம் (3) வெள்ளி அனுமந்த வாகனம். |
| 4) தோலோத்ஸவம் அல்லது ஊஞ்சல் சேவை | ரூ. 750/- மதியம் 1-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப்படுவர். கோயிலுக்குள் உள்ள கண்ணாடி அறையில் இச்சேவை நடைபெறும். அன்பளிப்பு: சேஷவஸ்த்ரம் ஒன்று. |
| 5) வசந்தோத்ஸவம் | ரூ. 3000/- (நாள் ஒன்றிற்கு) மதியம் 2 மணிக்கு. 10 நபர்கள் அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 6 வடைகள், 20 தோசைகள், தத்யோதனம், புளியோதரை, பொங்கல், சர்க்கரைப்பொங்கல் |
| 6) ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. 500/- மாலை 5-30 மணிக்கு. கோயில் வளாகத்திற்கு வெளியே நடைபெறும் சேவைக்குப்பிறகு, வைகுண்டம் 'க்யூ' கட்டிடம் வழியாக 5 நபர்கள் தரிசனத்திற்கு அனுமதிக்கப்படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம் ஒன்று. |

மேற்குறிப்பிட்ட சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்து கொள்ளலாம்.



# "அகத்தின் அழகு முகத்திலே"

திரு. வி. ராகவன் - சென்னை.

பிணிபோக்கி உடல் வளர்க்கும் தாய்ப்பால் உதடுகளிடையே வழிந்தோட ஒன்றுமறியாப் பச்சிளங்குழந்தையின் முகத்தைக் காணில் வயிற்றுப் பசியும் பறந்தோடிடும்; சகல தாபங்களும் தீர்ந்திடும். இதுகொண்டே "பால வடியும் முகம் பார்த்தால் பசிதீரும்" என்றும் மூதுரையும் இன்று நாட்டிலே நடையாடுகிறது. ஹிதமே சொல்ல வல்ல நாவினின்றும் எக்காரணமுமின்றிச் சுடுசொல்லே வருமாயின் "முசுடு", "சிடுமூஞ்சி" என்னும் அவச்சொல்லும் வழக்கிலுள்ளது. உள்ளத்திலே எழும் உணர்ச்சிகளான சோகம் களிப்பு, கோபம் ஆகிய யாதாயினும் அதுமுகத்திலே பிரதிபலிக்கிறது. ஆகவே முகத்தைக் கவனிக்குமளவிலே ஒருவன் என்ன நிலையிலுள்ளான் என்பதனை நன்குணரமுடிகிறது. இதனால் "அகத்தினழகு முகத்திலே" என்னும் சொல்லும் வழக்காயிற்று.

அழகிய வட்ட வடிவு முகத்தைக்கண்டு களித்திட்டோமே தவிர, அந்தர்யாமியாய் இதயக் கமலத்துள்ளே கிடக்கும் இறைவன் போன்று சீவாத்துமாக்களின் முகமும் "ஓம்" என்னும் பிரணவச் சொல்லின் வரிவடிவழகைக் கொண்டு விளங்குவதோடு உயரிய தத்துவங்களையும் தன்னுள்ளேகொண்டு பிரகாசிக்கிறது என்பதனை அறியோம்.

நாராயணன் தன் உந்தித் தாமரையினின்றும் நான்முகனைப் படைத்தான். இவ்வாறு படைத்திட்டவன அவனுக்கு வேதத்தினைக் காட்டிக்கொடுத்து, "இதுகொண்டு உலகைப்படை" என்று நியமித்தான். பிரஜாபதியான இவனும் ருக் யஜூர் சாமம் ஆகிய மூன்று வேதங்களினின்றும் சாரமான மந்திரங்கள் முற்சேர்க்கைச் சொற்களான (வ்யாஹ்ருதிகள்) "பூ:", "புவ:", "ஸுவ:" என்னும் மூன்று சொற்களைத் தேர்ந்தெடுத்தான். இதினின்றும் மூன்று சிறந்த அர்த்தங்களைத் தரவல்லதான, "அ", "உ", "ம" என்னும் மூன்று அக்ஷரங்களைக் கொண்டு பொன்னை உருக்கி இரும்பு ஓடத்திலே ஓடவிட்டுக்கட்டிப் பொன் எடுப்பாரைப்போல் பிரணவச்சொல்லாம், "ஓம்" என்னும் ஒற்றை எழுத்தைச் சமைத்தான்.

இவ்வாறு தோன்றின "ஓம்" என்னும் சொல்லில் பொதிந்து கிடக்கும் மூன்றர்த்தங்களைக் காட்டித்தரும் வண்ணம் மூன்று பதமாய் எட்டெழுத்துக்களைக் கொண்டதான "ஓம் நமோ நாராயணாய" என்னும் திருமந்திரத்தை தானே நரனாகவும் நாராயணனாகவும் தோன்றி பத்ரிகாச்ரமத்திலே திருமால் தனக்குத்தானே உபதேசித்துக் கொண்டான். பெரியாழ்வாரும் இதனை "மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி மூன்றெழுத்தை" (பெரியாழ். திரு. 4-7-10) என்றருளிச்செய்துள்ளார். இவ் "ஓம்" என்னும் சொல் வேதம் ஓதுவதற்கு முனனும் ஓதிமுடிக்கும் தருணத்திலும் ஓதப்பெறும் ஏற்றமும் பெறறது.

நாராயணனிடமிருந்து தான் பெற்ற வேதங்களைக்கொண்டு நான்முகனும் சீவன்களைப் படைக்க வாரம்பித்தான். "ஓம்" என்னும் பிரணவச்சொல்லைப் படைத்திட்டவன் சீவன்களைப் படைக்க அச்சீவன்களுக்குப் பொலிவூட்டும் முகமும் "ஓம்" என்னும் பிரணவச் சொல்லின் வரிவடிவமைப்பைக் கொண்டதாகவே அமைந்தது. தாபங்களனைத்தையும் தணித்திடும் பால்வடியும் முகம் ஒன்றையே கண்டுகளித்திட்ட இப்புறக்கண்களுக்கு இதனை அறிய இயலாது. ஞானத்திற்கு இருப்பிடமான அகக்கண் கொண்டு இதனை அனுபவித்திடலாம்.

ஓங்கார வட்டமுகம் "ஓம்" என்னும் பிரணவச்சொல்லின் அழகிய வடிவைக்கொண்டிருப்பதுடன் அதில் பொதிந்து கிடக்கும் மூன்று அக்ஷரங்களையும் நம் அகக்கண் முன்னே காட்டிடும். இக்கட்டுரையின் தலைப்பான "அகத்தின் அழகு முகத்திலே" என்பதுவும் இம்மூன்று அக்ஷரங்களையும் காட்டிடும். எவ்வாறெனில், இத்தலைப்பின் மூன்று பதங்களின் முதல் எழுத்துக்களாவன. "அ", "அ", "மு" என்பனவாகும். மூன்றும் எழுத்தான "மு" என்பதோ "ம்" என்றும் மெய்யெழுத்துடன் "உ" என்னும் எழுத்துச் சேர்ந்ததனால் உண்டானது. இவ் "உ" என்னும் எழுத்து இரண்டாம்

அக்ஷரமாயிற்று. "ம்" எனப தனுடன் தலைப்பின் இரண் டாம் எழுத்தான "அ"வைச சேர்க்க, ம+அ=ம என்னும் அக்ஷ ரம் கிடைக்கிறது. இதனால் "ஓம்" எனபதின் மூன்று அக்ஷ ரங்களான "அ","உ","ம" கிடைக் கின்றன.

முதல் அக்ஷரமான "அ" என பதனை வேதம் மிக்க பெருமை யோடு "அகாரத்தினால பேசப் படுபவன் விஷ்ணு" என்று கோஷிக்கும். "எழுத்துக்களில் நான் அகாரமாயிருக்கிறேன்" என்று கீதையில் கிருஷ்ணன் சொல்லுகிறான். திருவள்ளு வரோ "அகர முதல எழுத்தெல் லாம் ஆதிபகவன் முதற்றே வுலகு" என்று பறைசாற்றுகி றார். சாத்திரங்களோ, "அகார வாச்யனான அனந்தனுக்கு அடி மைப்பட்டவன் நரன். புரு டோத்தமனே நரன் எனப்ப டுகிறான். இவ்வாறு நரனுடன் சம்மந்தப்பட்டுள்ள பொருள்கள் யாவும் 'நாரங்கள்' எனப் படுகின்றன. உயிர், உயி ரில்லாப் பொருள்கள் யாவும் அவனால் படைக்கப்பெறு கின்றன. அவனால் வ்யா பிக்கப்பெறுகின்றன. நியமிக் கப்பெறுகின்றன. காப்பாற் றப்படுகின்றன. நாரங்களைக் கொண்டே நரனை நிரூபிக்க வேண்டியதாயிற்று. புருடோத்த மனுக்கு நாரங்கள் அயனமாயி ருக்கின்றன. அதனால் இவன் நாராயணன் என அழைக்கப்பெ றுகிறான். நாரங்களே அவனுக் கிருப்பிடமாகவும் அமைந்தன" என்று முழங்குகின்றன. இத னால் நாராயணன் உடை யவன். சீவன்கள் அனைத் தும் அவனின் உடைமை. அவ னுக்கே அடிமை செய்து கிடப் பதே சீவன்களின் பாரதந்திரி யம் என்பது நன்கு புலப்படும்.

"காப்பாற்றப்பெறுகின்றன" என்று சொல்லுமளவில் "துக் கம் என்னும் விரோதியைப

போக்கி சுகம் என்னும் இனிய அனுபவத்தைச் செய்தி டல்" என்னும் பொருள் கிடைக் கும். அவ்வாறு காப்பாற் றும் பொழுது பிராட்டியா ரும் உடனிருக்க வேண்டும். இங்கு பிராட்டியாரும் (இலக் குமி) அவனுடன் சேர்ந்தேயி ருக்கிறாள் என்பதனைக் காட் டிடும் வண்ணம் பிராட்டி யைக் குறித்திடும் "உ" என்னும் அக்ஷரம் அமைந்திருக்கின்றது. தாமரை மலரில் தோன்றி அதன் நிறம், மணம் ஆகி யவற்றைத் தானும் கொண்டு மிக்க உகப்போடு அம்மல ரிலே வீற்றிருப்பவள் ஆகை யாலே இவள் 'தாமரை மல ராள்' எனப்போற்றப்பெறுகிறாள். தாமரை மலரினும் மணத்தி லும் மென்மையிலும் மேம்பட் டதான நாராயணனின மார்பி னையே "அகலகில்லேன்" என ஒரு கணமும் விட்டகலாது நித் திய வாசம் செய்து கொண் டிருப்பவள் இவள். இத னையே "இதனையே பர்த்தா வினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலை யும் விடாதேயிருக்கும் மாதா வைப் போலே ப்ரதம சர மபதங்களை விடாதேயிருக்கும் இருப்பு" என்று பிள்ளைலோ காசார்யர் சுவாமி தன் 'முமு க்ஷுப்படி' என்னும் க்ரந்தத்தில் அருளிச்செய்தது. அவனுக்கு (நாராயணனுக்கு) பிரிய நாயகி யாய் இன்பத்தினைக் கொடுத் தும் தாயாம் தன்மையால் மக் களுக்கு நன்மை புரிவதில் நாட் டம் கொண்டு, பிரதம பதமான 'அ' என்னும் அவனுக்கும் சரம பதமான "ம" என்னும் மக்களுக் கும் உள்ள உறவினைக் காட் டிடும் வண்ணம தான் இவர் களுக்கிடையே கிடந்து அருள மழை பொழிந்திடுகிறாள்.

"க" எனும் க வரக்க முதல் "ப" என்னும் பகாரம் வரையி லான இருபத்திநான்கு எழுத் துக்களும் பூமி முதல் ப்ரக்ருதி வரையிலான தத்துவங்களைக் குறிக்கின்றன. இருபத்தைந் தாம் அக்ஷரமான "ம" ஞான சொரூபனும் ஞானகுணகனனு மான ஆத்மாவைக் குறிக்கும். "இந்த ஜீவன் இருபத்தைந்தாம் தத்துவம் (உண்மைப்பொருள்)" "இந்த ஜீவாத்மா இருபத் தைந்தாம் உண்மைப் பொருளா கிறான்" என்றவாறு ஜீவாத்மா என்னும் சேதனனைக் குறித் திடும். என்றும் எதனாலும் அழிவில்லா ஞானப்பிழம்பாய் விளங்கும் இச்ஜீவாத்மா பெற றிருக்கும் முகமோ ஓங்காரவட்ட முகம். இவ்வளவால் இச்சேத னன் "அ" என்னும் அக்ஷ ரததால் பேசப்படும் நாராயண னுக்கே உடைமையானவன் என் பது நன்கு விளங்கும்.

இவ்விதப்பெருமைகளுக் கெலலாம் உரிய ஓங்கார முகத் திற்கு அழகூட்டுவது நெற் றியிலே பளிச்சென்று இட்டுக்கொண்டிருக்கும் நெற் றித்திலகமே. நாசியினின்றும் தொடங்கி மேல் நோக்கியி டப்பட்டுள்ள திலகம் ஊர்த்வ புண்ட்ரம் எனச் சிறப்பிக்கப்பெ றுகிறது. பல்லாயிரக்கணக் கான நரம்புகளால் பிணைக்கப் பெற்றிருக்கும் இச்சரீரத்தில் (1) சூரியாம்சமான இடகலைநாடி (2) சந்தராம்சமான பிங்கலநாடி (3) தேவியம்சமான சூட்சுமநாடி என இம்மூன்று நாடிகளே சிறப் பிடம் வகிக்கின்றன. சுத்தமான காற்றை இடகலை நாடி மூலம் உள்ளிழுப்பது பூரகம், நாசித் துவாரங்களை மூடிக்கொண்டு

சுவாசத்தை அடக்குவது கும பம், சுவாசத்தை பிங்கல நாடி வழியே வெளிவிடுவது ரேசகம் எனப்படும். இவ்வாறு மூச்சுக் காற்றைக் கட்டுப்படுத்தல் பிரா ணயாமம் எனப்படும். இதனால் சுத்தீகரிக்கப்பெற்ற இரத்தம் மூளைக்குச் செலுத்தப்பெற்று புத்திக்கூர்மையும், ஞாபகசக்தி யும் விரிவடைகின்றன. இவ்வ ரிய செயலுக்குரிய சூரிய சந்தி ராம்சமான நாடிகளைக் காட்டி டும் வண்ணம் வெண்மை நிறத் தாலும், தேவியம்சமான சூட் சும நாடியை ஸ்ரீசூர்ணம் எனும் செந்தூரச் சிவப்பு நிறத்தாலும் மேல்நோக்கி தரித்துக்கொண்டி ருப்பதே "ஊர்த்வ புண்டரம்" எனப்படுமாம்.

உபநிஷத்தும் வேதமும், "மண் ணையே தன் சரீரமாகக் கொண்டிருக்கும் பூமிதேவியே! நான் புரிந்திட்ட தீச்செயல் களின் பாவத்தைப் போக்கு வாயாக. இதனால் நீடூழிகா லம் வாழ்வேன். புஷ்டி யைக்கொடு. அனைத்தும் உன் னிடத்தே நிலை நிற்கின்றன. பாவங்கள் நீங்கி நீடூழிகாலம் வாழ உன்னை நெற்றியிலும் சிறந்தவிடங்களிலும் தரித்துக் கொள்கிறேன்" என்றும் பிரார்த் திப்பதாகக் கூறுகிறது. "நான்கு வண்ணங்களிலே காணும் இம் மண்ணின் கருப்பு நிறமோ ஐசுவரியத்தையும், சிவப்போ ஆரோக்யத்தையும், மஞ்சள் நிற மென்னில் ஞானத்தையும், வெளுப்பாகில் மோக்ஷத்தையும் தரவல்லதாம். இறைவன் குடிகொண்டிருக்கும் சன்னதிக ளிலும் கோவில் மதில் சுவர்க ளிலும் பளிச்சென்று விளங்கு வது திருமண். நாரணன் குடியி ருக்கும் கோவிலாகிய இச்சரீரத் தில் முக்கியமாக நெற்றியிலே னும் வெள்ளைத் திருமண்ணுக் கிடையே இலக்குமியின் சின்ன மான ஸ்ரீசூர்ணத்துடன் இட் டுக்கொள்வது நலம் பயக்கும்.

"ஓம்" என்னுமதை மனத்தே சிந்தித்துகொண்டு காற்றை உள் ளிழுப்பது காறறுடன் பிர ணவத்தின மணமும் சேர்ந்து பிராணயாமததைச் சிறப்பிக்கும். இதனால் இகத்திலும் பரத்தி லும எம்பெருமானோடு கூடிக் குலாவிடும ஆனநதானுபமடை வர எனபதனைப் பெரியாழ் வார்,

மூலமாகிய ஒற்றை எழுத்தை
மூன்றுமாத்திரை உள்ளெழுவாங்கி
வேலைவண்ணனை மேவுதிராகில்
விண்ணகத்திலே மேவலுமாமே"
(பெரியாழ்.திரு. 4-5-4)

என்றருளிச்செய்துள்ளார். அட் டாங்கயோகத்திலே சித்திய டைந்த ஆசார்யராம் நாத முனிகளின் சிஷ்யரான குருகை காவலப்பன் என்பார் இகத்தி லேயே நாரணனின் திருத் தொடையிலே அமர்ந்து பேரா னந்தம் அடைந்ததாகக் குருபரம் பரை நூல் பேசிடும்.

"பருப்பதத்துக்கயல் பொறித்த
பாண்டியர் குலபதி போல்
திருப்பொலிந்த சேவடி
என்சென்னிமேல் பொறித்தாய்"
(பெரியாழ்.திரு. 5-4-7)

'கனகவிசயர் என்னும் பாண் டிய குல மன்னர் வடநாடு வெற்றி கொண்டு தன் மீன் இலச்சினையை இமயத்திலே என்றும் அழியாதவாறு பதித்த துபோல், மலர்மகளும் மண்ம டந்தையும் தாரகமாகப் பிடித்து விடும் மெல்லடிகளைத் தன் சென்னியின்மேல் நிலைத்தி ருக்கும் வண்ணம் வைத்தாய்' என புளகாங்கிதராய்ப் பேசுகி றார். மகாபலியிடம் யாசித்துப் பெற்ற மண்ணை அளந்துகொள் ளவிழைந்த திருமாலின் திருவடி யில் கிடந்தவர்கள் அக்காலம் வாழ்ந்திருந்த நம் மூதாதையர் களே. அவன் திருவடி பட் டமையால அவர்களனைவரும் திருமாலடியார்களே! அவரகள் வழித்தோன்றலான நாமனை வரும் திருமாலடியாரகளே!

திருமந்திரம், துவயம், சரம சுலோகம் ஆகிய மந்திரங்களை உபதேசித்து உலகிற்கெல்லாம் பிரதம குருவாக விளங்கும் திரு மாலுக்கு குரு ஒருவரும இல்லை என்னும் குறையுண்டு. ஜக தாசார்யரான எம்பெருமானார் திருக்குறுங்குடியில் எழுந்தருளி யிருந்தார். ஒருதினம் தம்மருகே சிஷ்யரான வடுகநம்பி இருப்ப தாக நினைந்து "வருகா! கிட் டவா, திருமண் இட்டு விடுகி றேன்" என்றார். வடுகநம்பி அங் கில்லாத நிலையில் இதுவே தக்க சமயமென்று அர்ச் சையாய் அங்கு எழுந்தருளியி ருக்கும் திருக்குறுங்குடி நம்பி யும் வடுகநம்பியைப்போன்று தோன்றி எம்பெருமானார் திருக் கரங்களாலே திருமண் காப்பு சாத்திக்கொண்டான். இது ஒரு ஐதீகம். திருமாலடி யார்கள் அவன் திருவடிகளைச் சிரசால் தரித்துக்கொள்வதாய்க் கொண்டு நெற்றியிலே திரு மண் பளிச்சிடுகிறது. திருக்கு றுங்குடி நம்பியோ துவய மந்தி ரத்தை உடையவரிடம் உபதே சமாகப் பெற்று வைஷ்ணநம்பி யாய் விளங்கி ஆசார்யன் திரு வடியை சிரசால் கொள்வது போல் தன் நெற்றியில், ஆசார் யனே தன் 'கரங்களால் திருமண் இட்டுக்கொண்டான்.

இவ்வாறான பெருமைகளுக் கெல்லாம் உரிய முகத்தை "பாழும்நெற்றி"யென வைத்தி ருக்கலாகுமோ? ஆகவே அவ ரவர்கள் சம்பிரதாயத்திற்கேற்ற வாறு பளிச்சென்று தில கம் இட்டுக்கொள்வது சாலச் சிறந்தது.



விதேக தேசத்து மாமன்னன் ஜனகன் யாகம் இயற்ற யாக சாலையைத் தானே மேழி பிடித்து உழுகிறான். மேழி முனையில் ஒரு அற்புதம் தென்படுகிறது. ஆம்... மண்ணுக்குள் பொன்னொளி வீசும் பெண் குழந்தை தகதகவெனத் தோன்றுகிறாள்.

பெருமகிழ்ச்சியுடன் மன்னன் பொற்செல்வியை எடுத்து வளர்க்கிறான். ஸம்ஸ்கிருதத்தில் மேழி முனைக்கு 'ஸீதா' என்று பெயர். ஆகவே அந்த அற்புத தவச்செல்வியை 'ஸீதா' என்று அழைக்கின்றனர்.

ஜனகனுக்கோ தன் வளர்ப்பு மகளை அப்படி அழைக்க மனம் இல்லை. மிகச் சிறந்த தத்துவ ஞானி. ப்ரும்ம ஞானத்தை அறிந்து உணர்ந்து தத்துவ தரிசிகளின் ஓர் ஆதர்சமாக வாழும் ஒப்பற்ற வைராக்கிய புருஷனாக விளங்கி வருபவன்.

ஜனகனின் ஆசார்யன் பரம ஞானியான யாக்ஞவல்கியர். குருவால் சீடனுக்குப் பெருமை. சீடனால் குருவுக்கு மகத்துவம்.

ஆத்ம தத்துவம் அரசனின் அன்றாட அனுஷ்டானம். பரப்ரும்ம சாக்ஷாத்காரம் ஜனகனின் அனுபவம். தன் மகள் ஜானகி ஆத்ம சொரூபம் என்ற நினைப்பு எப்போதும் உண்டு. ப்ரமாத்மாவோடு சங்கமிக்கச் செய்ய வேண்டிய

ஸீதா தேவி அசோக வனத்தில் சிறைப்படுத்தப்படுகிறாள். ஆத்மா பரமாத்மாவைப் பிரிந்து தவிக்கிறது. சோகப்படுகிறது. வேதனைப் படுகிறது. சக்தி சிவத்தை சேர தவம் இயற்றுகிறது. பிரிக்கப்பட்ட ஆத்மா பரமாத்மாவோடு சங்கமிக்கும் தீவிர எண்ணத்தில் துடித்து பிரலாபிக்கிறது. அழிந்துவிடலாம் என்ற ஆயாசத்துடன் ஆத்திரப்படுகிறாள் ஸீதா தேவி.

"ராம் ராம் ஜய ஜய ராம்' அமுதக்குரல் கேட்டு சிலிர்ப்படைகிறாள் பிராட்டி.

அனுமன் வடிவில் அமிர்த வாரிதி. சாவு தவிர்க்கும் சஞ்

# ஸீதா ஜானகியாகிறாள்

**தேதியூர் பாலு**

ஒப்பவில்லை. ஜானகீ என்று அழைத்து மகிழ்கின்றான் மன்னன். 'ஜனகனின் மகள்' என்ற உரிமை உடைமையாக்கிக் கொள்ளப்பட வேண்டும் என்பது அவனது அழுத்தமான ஆசை. 'ஸீதா' என்று அழைத்தால் வளர்ப்புமகள் தானே என்று அந்நியப்பட்டு விடுவாளோ என்ற சம்சயம் மன்னனுக்கு.

ஜனகன் வளர்ப்பில் ஜானகி முழுமையான பெண்மையின் பெரும் தவமாக வளர்கிறாள். ஜனகனின் மகள் என்பதை விட ஜானகியின் தந்தை தான் என்ற ஆத்ம பரவசத்துடன் மன்னன் வாழ்கிறான்.

மன்னன் வேதாந்திகளின் அரசன். அரச வேதாந்தி மண்ணுலகத்தை ஆண்டாலும் 'மன்' னவன் ஆத்மாவில் ஒட்டுவ தவத்தை அனவரதமும் செய்து வருகிறவன்.

தவம் பலிதமாகிறது. ஸீதா கல்யாணத்தின் மூலம் ஆத்மாவோடு பரமாத்மா ஐக்யப்பட்டுவிட்ட பரஞான அனுபூதி. பரப்ரும்ம சொரூபமான ராமன் ஜானகியை கரம்பிடித்துத் திருமணம் என்ற வியாஜத்தால் ஒன்றாகி லயித்த பெருமையான வைபவம்தான் ஸீதா கல்யாணம் என்பதை உணர்ந்தான் ஜனகன். மானுடத்தை மயக்கி நீசவழியில் நிர்மூலமாக்கும் தார்மீக நிலை குலைவான காம இச்சை அரக்கனாகி ஆத்மாவை கடத்திப் போய் முறைகேடான முறையில் இன்பம் அனுபவிக்க ஆசைப்பட்டு லௌகீகத்தின் மயக்கத்தால் வெறிக்கூத்திடுகிறது இராவணன் உருவகமாக.

சீவி. ஆசார்ய சொரூபத்தில் ஆத்மா பரமாத்வாவை தரிசித்து விடலாம் என்ற நம்பிக்கை.

அனுமன் ஆறுதல் சொல்கிறான். ராமனின் கரத்தில் அலங்கரித்த அடையாள கணையாழியைக் கொடுக்கிறான்.

ஆஆ... அந்த மோதிரத்தைப் பார்க்கிறாள் ஸீதை... இடைவிடாமல் பார்க்கிறாள்... பரம்பொருள் தரிசன சாத்யத்தை சாற்றும் ஜீவித அடையாளம் அது.

'ப்ரேக்ஷமானா' ஸீதா தேவ் மோதிரத்தைப் பார்க்கும் நிகழ்ச்சியை ஆதிகவி பிரயோகப்படுத்தும் அத்யற்புத பதம் அது.

"பர்த்து: கர விபூஷணம்"

கணவனின் கரத்தை அலங்கரித்த பூஷணம் - அணி அல்

லவா அந்த மோதிரம். அது அங்குலீயம் மாத்திரமல்ல. கண வனே! "பர்த்தாரமிவ ஸம்ப் ராப்தா"

ஆத்மா... பரமாத்மா வையே தர்சனம் செய்துவிட் டது போன்ற பரம மகிழ்ச்சி.

இது எப்படி.... 'பர்த்து' என்றால் சகல புவனங்களையும் தரிக்கின்ற விராட் சொரூபமான பரம்பொருள் என்பதே உணர்த் தப்படும் உண்மை. அந்த சொரூ பத்தின் 'கே' சிரசில் அதாவது முகத்தில் பிரகாசித்துக்கொண் டிருக்கும் சூரியனே தனது வம் சத்தைச் சேர்ந்த ராமபத் னிக்கு ஆறுதல் சொல்ல, ஜீவி தம் அளிக்க ஆபரணம் போல் எதிரில் தர்சனம் கொடுத்துள் ளார் என்ற மட்டற்ற மரியாதை யுடன் கிரகித்துக்கொண்டாள். இது பொருத்தமான பொருள் விளக்கம் ஆகும்.

'பர்து: கே ய: ரவி: ஸ ஏவ பூஷணம்' என்ற விக்ரஹம் செய்து பாருங்கள். பொருள் தெளிவாகும்.

விராட் புருஷனுக்கு சந்திர னும் ஸூர்யனும் நேத்ரங்கள் தாமே. 'சந்த்ர ஸூர்யெள ச நேத்ரே' என்ற பிரமாண வாக் கியம் இருக்கிறதல்லவா.

சூரியனுக்கும் எழில்கூட்டு வது நாராயணனேயன்றோ! அணியினால் அணிபூணுகிற வன் சோபைபெறுவது போல் சூரிய மண்டலத்தின் நடுவில் பிரகாசிக்கும் ஸ்ரீமன் நாரா யணனால்தானே சூரியனுக்கு பிரகாசம் ஒளியும் ஏற்படுகிறது. சூர்யன் எந்த பரம் பொருளால் ஒளிவீசுகிறதோ அந்த பரம் பொருள் நாராயணன் அன்றோ! "த்யாயே ஸதா ஸவித்ரு மண் டல மத்ய வர்த்தீ" என்று பிரார்த்தனை சுலோகம் இதை நிரூபிக்கிறதே.

'தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி' என்பது உபநிஷத் வாக் கியம். ஆதவனுக்கு ஒளி வழங்குவது பரப்ரும்ம சொரூ பம் அன்றோ.

அந்த நாராயணனே தன்னை சாக்ஷாத்கரிக்க மோதிர ரூபத் தில ஆசார்யன் சுட்டிக்காட்ட தர்சனம் தருகிறார் என்று உணர்ந்த ஸீதா அதைப் பெற றுக்கொண்டாள்.

கணையாழியைக் காணும் காகுத்தன் பத்தினி முதலில் அந்த அங்குலீயம் அணி செய்த அழகு விரல், அந்த விரலு டன் கூடிய கம்பீரமான புஜம், பிறகு அந்த புஜத்துடன் கூடிய ஸ்ரீராமபிரானின் திவ்ய சரீரம் மனதில் தோன்றுகிறது.

அப்போது தன் பர்த்தா வையே தரிசனம் செய்தது போன்ற பரமானந்தம் அனுப விக்கிறாள் பிராட்டி.

"ஜானகீ முதிதா அபவத்" என்று குறிப்பிடுகிறது வால் மீகம்.

ஸீதா - இப்போதுதான் ஜானகீ ஆகிறாள். தன் தந்தை ஜனகன் ஆத்மஞானி. லௌகீக சுகங்களால் ஆனந்தமடையாத தத்துவ தர்சி. அந்த ஜன கன் உண்மையான 'ஆனந்தம்' அடைவது எப்போது..... எப் படி.... எங்கே.

ஆத்மாவும் பரமாத்மாவும் சங் கமிக்கும் போது ஏற்படும் சுவா னுபூதி - அந்த ஆனந்தம்தான் உண்மையான ஆனந்தம். மற்ற இன்பங்களெல்லாம் இந்த ஆத் மானந்தத்தின் மிகச்சிறிய துளி தான். இதுவே அமுதக் கடல். மற்றதெல்லாம் சர்க்கரை கலந்த நீர்த்துளி.

'ஏ தஸ்யை வாநந்தஸ்ய அன் யானி பூதானி மாத்ரா முப ஜீவந்தி' என்ற பிரஹதாரண்ய உபநிஷத வாக்கியத்தின் உள ளூரை உணர்த்தப்படும் விளக் கம்.

இப்படி ஜனகன ஆனந் தம் அனுபவித்த சந்தர்ப்பத்தை ஸீதாதேவி அறிவாள்.

இப்படிப்பட்ட ஆத்மானந் தத்தை அளித்த - அளிக்க வழி காட்டிய - ஆசார்யரான யாக்ஞ வல்கியருக்கு தனது ராஜ்யத் தையும் தன்னையும் உடை மையாக்கினான். அப்போது அடைந்த அந்த ஆத்மானந்தத் தின் மகிமையை ஸீதை அறி வாள்.

யாக்ஞவல்கியரே உபதேசித்த ஆத்மானந்த ஞானத்தை ஜன கன் பெற்று, கற்றுத் தெளிந்து உணர்ந்து அனுபவித்து இருந் ததை ஸீதாதேவி நன்கு அறிந் தவளே.

அப்படிப்பட்ட ஆனந்தத்தை இப்போது ,- ராமனின் அங்கு லீயத்தைப் பெற்றபோது அனு பவிக்கிறாள்.

தன்னைக் கண்டெடுத்தது முதல் தன்னை தன் தந்தை 'ஜானகீ' என்று அழைத்த போதெல்லாம் பிராட்டி - தான் அந்த 'நாம தேயத்துக்கு' முழு மையான தகுதியுள்ளவளோ... என்று ஐயமுற்றிருந்த நிலை... நீங்கி, இப்போதே - 'முதிதா பவத்' - 'ஜானகீ முதிதா பவத்' என்ற வால்மீகத்தின் பதப்ரயோ கம் அர்த்தபுஷ்டியானது.

இப்போதே... இவ்வாறே இந் நிலையிலேயே "ஸீதா ஜானகி யாகிறாள்." 

# இராமலிங்க அடிகளின் ஜோதிப்பொருள்

திருமதி. G. கௌசல்யா - வேலூர்.

சிவன் என்னாட்டவர்க்கும் இறைவன். அவன் தென்னாட்டினைத் தனக்குரிய இடமாகக் கொண்டிருப்பதனால் சிதம்பரத்தில் நடனமிட்டுக் கொண்டிருக்கிறான். அவ்விறைவன்பால் மாளாத அன்புகொண்டவர் இராமலிங்கர். இவர் பிறந்த ஊர் தில்லைக்கு அருகில் உள்ள மருதூர்.

இராமலிங்கர் 5-10-1823ம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தை 'இராமையாப் பிள்ளை'. தாய் 'சின்னம்மை'. இவருடன் பிறந்தவர்கள் 'சபாபதிப்பிள்ளை', 'பரசுராமப்பிள்ளை' என்பவர்களாவர். இவர்தம் சகோதரர் சபாபதிப்பிள்ளையையும், காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியாரையும் ஆசிரியர்களாகப் பெற்றார். இளமையிலேயே கவிபாடும் ஆற்றல் பெற்றார். தமிழிலும், வடமொழியிலும் நல்ல தேர்ச்சி பெற்றவர். இவரது பாடல்கள் எளிய தமிழில் பாமரர்க்கும் விளங்கும் வண்ணம் அமைந்தவை.

இராமலிங்கர் கருவிலேயே திருவுடையவராய் விளங்கினார். இவர் சிறு குழந்தையாய் இருக்கும் பொழுதே இவரிடம் குடிகொண்டிருந்த ஆற்றல் வெளிப்படத் தொடங்கியது. இராமலிங்கரது பெற்றோர் ஒரு வயது குழந்தையாய் இருந்த இராமலிங்கரையும் எடுத்துக்கொண்டு 'தில்லை அம்பலவாணனைத்' தரிசிக்கச் சென்றனர். அப்போது இறைவனுக்கு அபிடேக ஆராதனை நடக்கும்



நேரம் என்பதால் சன்னிதியைத் திரையிட்டு மூடியிருந்தனர். இராமலிங்கர் தன்னைக் காண ஒருவயது குழந்தையாய் வந்திருக்கும் பொழுது சடங்குகளையும், சம்பிரதாயங்களையும் சிதம்பரநாதன் விரும்பவில்லை. எனவே திரைச்சீலையை விலகும்படிச்செய்தார். அனைவரும் நந்திவிலகப் பட்டீச்சுவர சிவனை வழிபட்ட 'நந்தனாரைப்' போல் பேராவலுடன் இறைவனை வழிபட்டு மீண்டனர். சிதம்பர ரகசியம் என்று அழைக்கப்படும் ஆகாய வெளியை, அண்டலிங்கத்தைத் தரிசித்துப் பேரின்பம் பெற்றார், ஒருவயது குழந்தையான இராமலிங்கர்.

சிறு பிள்ளைப் பருவத்தில் இராமலிங்கர் திண்ணையிலிருந்து கீழே விழுந்து விட்டார். அப்போது உமையம்மை வந்து தாங்கிப் பிடித்தார். தாய் தன் குழந்தைப் பசியோடு இருந்தால் தாங்க மாட்டாள். உலகமாதாவான உமையம்மையும் ஞானக் குழந்தையான இராமலிங்கர் பட்டினியாக இருப்பதைத் தாங்க இயலாதவளாய் இராமலிங்கரின் அண்ணியின் வடிவெடுத்து வந்து இராமலிங்கருக்கு உணவளித்துச் சென்றார்.

இவ்வுலக நினைவற்று இறையின்பத்தில் திளைத்தார் இராமலிங்கர். அப்பொழுது தான் பெற்ற அனுபவங்களைக் கவிதையாக எழுதிக் கொண்டிருந்தார். தன் அருகில் இருந்த விளக்கு எண்ணையின்றி ஒளிமங்கியது. அதை உணர்ந்த இராமலிங்கர் தன் அருகில் இருந்த செம்பில் இருந்த தண்ணீரை எண்ணை என்று நினைத்து விளக்கில் ஊற்றினார். விளக்கும் எரிந்தது. இவ்வாறே இரவு முழுவதும் விளக்கினை எரியவிட்டு எழுதிக்கொண்டிருந்தார். அருட்பெருஞ்ஜோதி அகவலும் ஒரே இரவில் எழுதி முடிக்கப்பட்டப் பாடல் தொகுதியாகும். இவ்வகவல் 1596 வரிகளைக் கொண்டதாகும். இராமலிங்க அடிகள் பாடிய பாடல்கள் ஆறு திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. மொத்தம் 5818 பாக்களைத் தன்னகத்தே கொண்டது திருவருட்பா. ஆறும் திருமுறை இறையுணர்வு அனுபவங்களையும் மரணமிலாப் பெருவாழ்வை

யும் தெளிவாக விளக்குகின்றது.

இராமலிங்கர் இளமையில 'முருகனை' 'வழிபடு தெய்வ மாக'க் கொண்டார். திருவாசகத்தை வழிபடு நூலாகக் கொண்டார். அவ்வாறே 'திருஞானசம்பந்தரை' வழிபடு குருவாகக் கொண்டார். இளவயதில் முருகனை வழிபட்டார். அதனால்தன் தமயனோடு சென்னையில் வாழ்ந்த பொழுது 'கந்தர் கோட்டத்தில்' உள்ள முருகனைப் பெரிதும் விரும்பி வழிபட்டார். 'கந்தர் கோட்டத்தில்' கோவில் கொண்டுள்ள முருகனை வாழ்த்திப் பாடிய பாடல்களே 'தெய்வ மணிமாலை' என்று பெயரிடப்பட்டுள்ளது.

சிவபெருமான் தன் அடியவரான இராமலிங்கருக்குத் தானே உவந்து வந்து, அடிமுடி காட்டியருளினார். அதோடு மணிமுடி, செங்கோல், கங்கணம், ஆழி முதலியன அணிவிக்கப்பெற்றார். இவை மட்டுமல்லாது பிற உலோகங்களைப் பொன்னாக மாற்றும் ஆற்றலைப் பெற்றவராகவும் விளங்கினார்.

இராமலிங்கர் எளிய தமிழில் கவிதை இயற்றியதோடு உரைநடை நூல்களையும் எழுதினார். அவை:

1. சுத்த சன்மார்க்கச் சத்திய சிறுவிண்ணப்பம்.
2. சுத்த சன்மார்க்கப் பெருவிண்ணம்.
3. சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞான விண்ணப்பம்.
4. சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய ஞான விண்ணப்பம் என்பன.

இவை உரைநடையில் அமைந்த வேண்டுகோள் நூல்களாகக் கொள்ளத்தக்கன. 1. மனுமுறை கண்ட வாசகம். 2. ஜீவகாருண்ய ஒழுக்கம் முதலியனவும் இராமலிங்கர் எழுதிய உரைநடை நூல்கள் ஆகும்.

இராமலிங்கர் இறையருள் கைவரப்பெற்றவர். அவர் மிக ஆண்மைக்காலத்தில் 'வடலூரில்' வாழ்ந்தவர். இறையருள் பெற்ற அடியவர் என்பதனால் 'இராமலிங்க அடிகள்' என்ற சிறப்புப்பெயர் பெற்றார். பொன்னையும், பொருளையும் பிறருக்கு வாரி வழங்குபவர்கள் 'வள்ளல்கள்' என்று அழைக்கப்பட்டனர். இராமலிங்கர் உலக மக்களது துயர நீங்க ஆன்மீகக் கருத்துக்களை வாரி வழங்கினார் என்பதனால் அவருக்கு 'வள்ளலார்' என்ற காரணப்பெயரும் ஏற்பட்டது. மேலும் அவர் வாழ்ந்த வடலூரின் பெயரும் உடன்சேர 'வடலூர் வள்ளலார்' என்றும் அழைக்கப்பட்டார். பாமரர்க்கும் புரியும் வண்ணம் எளிய தமிழில் பாடல்களை எழுதித் தமிழ்த்தொண்டு செய்த வள்ளல் பெருமானார் பதிப்பாசிரியராகவும் விளங்கினார். அவர் பதிப்பித்த நூல்கள்.

1. ஒழிவிலொடுக்கம். 2. தொண்டைமண்டலச் சதகம். 3. சின்மய தீபிகை என்பனவாகும்.

வள்ளல் பெருமானார் சித்தராக விளங்கியவர். சித்துக்கள் கைவரப்பெற்றவர். இவர் ஆன்மீக உலகில் தனக்கெனத் தனி வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர். மனித உடல் "ஓ" வடிவில் அமைந்தது என்பதை அறிந்தவர். அதனால் அவர் தம் உடலை தூய வெள்ளாடை கொண்டு போர்த்திக்கொண்டார். கொல்லாமையைப் பெரிதும் வலியுறுத்தினார். உலக உயிரக்குலங்களுக்கிடையே வேறுபாடு கருதாதவர். விலங்கினுள் வாழும் உயிரும், மனித உடலினுள் வாழும் உயிரும் ஒன்றே என்ற கொள்கையை உடையவர். அதனால் பசியால் வாடும் உயிர இனங்களின் துயர் துடைத்தார். இதனை சிவபெருமான் தனக்களித்த கட்டளை என்றே கூறுகின்றார். முதலில் மக்களை சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தில் சேர்த்து அவர்தம் பசியினைப் போக்குதல் வேண்டும் என்றும், பின் அவரது மனமும், உடலும் சாந்தப்பட்ட பின்பே உபதேசிக்க வேண்டும் என்று சிவபெருமான் கட்டளையிட்டார் என்றும் கூறுகின்றார்.

"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும்
உடையவர்கள் எல்லாம்
உறவினத்தார் அல்லர் அவர்
புறவினத்தார் அவர்க்குப்
பயிர்ப்புறும் ஓர் பசிதவிர்த்தல்
மாத்திரமே புரிக
பரிந்து மற்றைப் பண்புரையேல்
நன்புறவேல் இங்கே
நயப்புறுசன்மார்க்கம் அவர்
அடையளவும் இதுதான்
நம் ஆணை என்றெனுக்கு
நவின்ற அருள் இறையே"

என்பது அப்பாடல்.

'ஒருவனே தேவன்' என்று தெளிந்து கண்ட இராமலிங்கர் மக்கள் அனைவரையும் சன்மார்க்க சங்கத்தில் சேர்ந்து ஒன்றுபட்டு வழிபடச் செய்தார். அதற்காக வடலூரில் சன்மார்க்க சங்கம், சத்திய தரும சாலை - சத்திய ஞானசபை என்னும் அமைப்புக்களை நிறுவி தில்லையில் கூத்தாடும் கூத்தப் பெருமானை வணங்கினார். இதற்கும் மேலாக இறந்தவர்களையும் இறைவனை வழிபடுவதற்கு எழுப்பச் செய்யவேண்டும்

என்றார். சிறு தெய்வ வழி பாடுகளையும், உயிரபபலிகளை யும் மிகவும் கடிநது கூறுகின றார். இதனைக் கடிநது கூறு கின்றார் என்பதைவிட அருசிக் கூறுகின்றார் என்பது மிகவும் பொருந்தும்.

"நலிதரு சிறிய தெய்வமென்று
ஐயோ
நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிக்குக் குடங்கள்
பலிக்கடா முதலிய வுயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவுங்
கண்டே
புத்திநொந்து உளம் நடுக்குற்றேன்
கலியுறு சிறிய தெய்வ வெங்
கோயில்
கண்ட காலத்திலும் பயந்தேன்"

"கண்ணினால் ஐயோ பிற உயிர்
பதைக்கக்
கண்ட காலத்திலும் பதைத்தேன்
மண்ணினில் வலையும் தூண்டிலுங்
கண்ணி
வகைகளும் கண்ட போதெல்லாம்
எண்ணி என்னுள்ளம் நடுங்கிய
நடுக்கம்
எந்தைநின் திருவுளம் அறியும்"

என்பன அவர்தம் திருவாக்கு களாகும்.

## எல்லாம் இறைவன் செயல்

இறைவனே எல்லாம். எல்லாமே இறைவன் ஆட்டுவித்த படியே ஆடுகின்றன என்ற உயர்ந்த தத்துவத்தை திருமி ழிசைஆழ்வார் கூறுகிறார். கடலில் பொங்கிஎழும் அலைகள் அந்தக் கடலிலேயே அடங்கி ஒய்ந்து விடுகின்றன. அதுபோல 'இறையருளே உன்னுடைய அருளாலே உலகத்தில் தோன்றி நின்று உலவுகின்ற உயிரினங்கள் இறுதியில் உன்னிடத்திலேயே இரண்டறக் கலந்துவிடுகின்றன'. இதை விளக்கும் பாடல்:

தன்னுளே திரைத்தெழும் தரங்க
வெண்தடங் கடல்
தன்னுளே திரைத்தெழுந்து அடங்குகின்ற
தன்மைபோல்
நின்னுளே பிறந்து இறந்து நிற்பவும்
திரிபவும்
நின்னுளே அடங்குகின்ற நீர்மை
நின்கண் நின்றதே.

--திருமழிசை ஆழ்வார்

எல்லாமே இறைவனுள் அடக்கம். அவனன்றி ஒரணு வும் அசையாது என்ற உயர்ந்த தத்துவத்தை இப்பாடல் விளக்குகிறது.

திருமதி. சு. பொன்னம்மாள் - முகவூர்.

மேற்குறிப்பிட்டப் பாடல் கள் வாயிலாக இராமலிங் கர் தெய்வங்களுக்கு அளிக் கும் உயிர் பலியைக்கண்டு பயந்ததும் புலால் உணவு கண்டு பயந்ததும் வெளிப்படு கின்றது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற வழி பாட்டுப் படிநிலைகளில் இராம லிங்கர் மேற்கொண்டது 'ஞான நெறி'. சரியையும், கிரியையும் உருவவழிபாட்டைப் பின்பற்றி யது. ஞானநெறி உருவமற்ற வழிபாடு. அதனை "உடல் வழி பாடு" என்றும் சொல்லலாம். யோகத்திலிருந்து யோகிகள் தம் உடலில் இறைவனைக் கண்டு வழிபடுவர். அத்தகைய வழிபாட்டின் போது, சிவபெ ருமானைத் தம்முள் ஜோதிவடி வாகக் கண்டார். இராமலிங் கர் ஜோதிவடிவாகத் தம்முள் கண்ட செம்பொருளே சிவபெரு மான்.

அச்சிவ பெருமானது அரு ளையே அவர்,

"அருட்பெருஞ்ஜோதி அருட்-
பெருஞ்ஜோதி
தனிப் பெருங்கருணை
அருட்பெருஞ் ஜோதி"

என்று குறிப்பிடுகின்றார். இவ் வுலகம் பஞ்சபூதங்களின் கூட் டால் ஆனது. இப்பஞ்ச பூதங் களுடன் கலந்தும் தனித்தும் இருக்கும் ஆற்றல் பெற்றவன் இறைவன். இத்தகையவன் சிவன். அவன் தனிக்குணங் களை 'தீ' வடிவாக அதாவது நிலம், நீர், தீ, காற்று, ஆகா யம் என்பவற்றுள் மூன்று வதாக உள்ள ஒளி வடிவைத் தன்னுள் கண்டவாறு எடுத் துக் கூறுகின்றார். அப்ப டிச் சொல்லும்போது ஜோதி வடிவான இறைவன் பிறப்பும் இறப்பும் அற்றவன் என்பதாகும். இதனை ஜோதிசுயம் என்பார். இவ்வாறே,

1) பிறப்பும் இறப்பும் அற்றவன்
- ஜோதிசுயம்

2) எல்லையற்ற பரம்பொருள்
ஜோதிபரம்.

3) அருள் நிறைந்தவன்
ஜோதி அருள்

4) இனபமயமானவன்
ஜோதி சிவம்.

என்றும் பாடிப் பரவுகின்றார். மேலும் நாத ஜோதியாகவும், யோக ஜோதியாகவும், ஏக ஜோதியாகவும், ஏறுஜோதியாகவும் இருப்பவன் இறைவன். இவற்றுள் "ஏறுஜோதி" என்னும் சொல்பொருள் நிறைந்தது.

இவ்வுலகம் பஞ்சபூதங்களின கூட்டால் ஆனது என்றாலும் "பஞ்ச பூதங்கள்" ஒவ்வொன்றும் பிறவற்றின் குணமும் கலந்திருக்கும். ஆனால் அதில் "நிலம்" பிற பொருட்களைத் தன்னை நோக்கி இழுக்கும் சக்தி உடையது. அதனால்தான் பொருட்கள் கீழே விழுகின்றன என்பது அறிவியலார் கண்ட உண்மை. ஆனால் "தீ" மட்டும் சுடர்விட்டு மேலநோக்கி எரியக்கூடியது. அவ்வாறே யோக நிலையை மேற்கொள்ளும் பொழுதும் மூலாதாரத்தில் "காமேசுவரனாக" உள்ள சிவன் மூலாக்கினியாக வெளிப்பட்டு ஆதாரங்களைக் கடந்து மேலேறுவான். அப்படி மேலும் ஒளி வெள்ளம் ஒவ்வொரு ஆதாரங்களைக் கடக்கும் பொழுதும் ஒவ்வொரு வண்ணமுமாகக் காட்சியளிக்கும். இறுதியில் "நடுநாடு" அல்லது "புருவநடுவை" அடைந்து பேரொளியை ஞானிக்குத் தரும். இத்தகைய பேரொளியே "நெற்றிக்கண்" என்று அழைக்கப்படும்.

இவ்வாறு இராமலிங்கர் தான் கண்ட காட்சிகளை "ஆணிப் பொன்னபலக் காட்சி" என்ற தலைப்பில் கூறுகின்றார். அவை:

"ஆணிப் பொன் னம்பலத்தே
கண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி - அம்மா
அற்புதக் காட்சியடி.

ஜோதிமலையொன்று தோன்றிற்று
அதிலொரு
வீதியுண்டாச்சுதடி - அம்மா
வீதியுண்டாச்சுதடி"

அவ்வீதி வழியே என்னும் ஆதாரங்கள வழி சென்றால்,

"கூடத்தை நாட அக்கூடம்
மேல் ஏழ்நிலை
மாடமிருந்ததடி-அம்மா
மாட மிருந்ததடி"

இவ்வதிசயித்தில திளைதது மேலே சென்றால,

"ஓர்நிலை தன்னில் ஒளிர்முத்து
வெண்மணி
சீர்நீல மாச்சுதடி-அம்மா
சீர் நீல மாச்சுதடி"

இவ்வாறு வெண்மணி நீலமாகிப் பின் கருநீலமாகிப் பின் மரகதப் பச்சையும், செமமாணிக்கமுமாகிப் பெருமுத்தாகி, வச்சிரப் பேர்மணியாகும். அதனபின பவளத்தின் நிறமடைந்து பின பொன்மணிவடிவாகி அதன்பின படிகநிறமாய் மாறும். அப்பொழுது ஏழ்நிலை மேலே இருந்த தம்பம் பொனதம்பமாய் மாறும். அதற்கும் மேலே செல்லுபொழுது சிற்சக்திகள் ஆயிரமாயிரம் வந்து இராமலிங்கரை மயக்கமுறபட்டனர். அவர் அதிலெல்லாம மயங்காது மேல சென்ற போது "கொடுமுடி கண்டார்". அதில பொறகோயிலிருந்தது. அதன கோபுர வாயிலைக் கடந்து செலலும் பொழுது கோபுர வாயிலுள பலகோடி சத்தர்கள வெள்ளை வண்ணமாக இருநதனர். அச் சத்தர்கள் இராமலிங்கரை யார? என்று கேட்டனர். இராமலிங்கர் அதற்குப் பதிலளிக்காது மேலே சென்றார். 'ஐவர்' அங்கு நின்றனர். அவ்வைவர் நின்ற திருவாயிலைக் கடக்கும் பொழுது ஒருவர் வழிகாட்ட முன்வந்தார். அவருடன் சென்ற பொழுது ஒரு மணிவாயிலைக் கணடார். அங்கு,

".........பெண்ணோடு ஆணுக
இருவரிருந்தாரடி - அம்மா
இருவரிருந்தாரடி.
அங்கவர் காட்ட அனுக்கத்திருவாயில்
அன்பொடு கண்டேனடி
அன்பொடு கண்டேனடி
அத்திருவாயிலில் ஆனந்த
வல்லியென்
அம்மை யிருந்தாளடி-அம்மா
அம்மையிருந் தாளடி.
அம்மையைக் கண்டேன் அவளருள்
கொண்டேன்
அமுதமும் உண்டேனடி - அம்மா
அமுதமும் உண்டேனடி.

## அறிவிப்பு

'ஸப்தகிரி'யின் வருடாந்திர சந்தாத்தொகை ரூ. 24/-லிருந்து ரூ. 48/-ஆக 1-4-96 இதழ் முதற்கொண்டு உயர்த்தப்பட்டுள்ளது. அதாவது தனிப்பிரதியின் விலை ரூ. 4/-. தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும் சந்தாதாரர்கள் இப்புதிய சந்தா மாற்றத்தினை மனதிற்கொண்டு தொகை அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறர்கள். ஏற்கெனவே நிலுவையில் இருக்கும் தொகையானது இப்புதிய சந்தாத்தொகைக்கேற்ப வரவில் கணக்கிடப்பட்டு அதற்கேற்ப சந்தாக்காலம் மாற்றப்படும்.

—ஆசிரியர்.

தாங்கும அவனருளாலே நடராஜ
சந்நிதி கண்டேனடி-அம்மா
சந்நிதி கண்டேனடி
சந்நிதியில் சென்று நான்
பெற்றபேறு
சாமியறிவாரடி-அம்மா
சாமியறிவாரடி”

என்றும் சொல்லும் பொழுது இராமலிங்க அடிகள் தானுள ஜோதி வடிவாகச் சிவனைக் கண்டு சிவானந்தப் பேறு பெற்றார் என்பது தெளிவாகிறது. இப்பாடலில் பெரிதும் “பரிபாஷைச் சொற்கள்” பயின்று வந்துள்ளன. தாம் கண்ட இறையனுபவம் வாயிலாகப் பெற்ற கருணையை மக்களுக்கும், மாக்களுக்கும் புலவராக, கவிஞராக, சொற்பொழிவாளராக, உரைநடை எழுத்தாளராக, நூலாசிரியராக, உரையாசிரியராக, ஞானாசிரியராக, போதகாசிரியராக, மருத்துவராக, துறவியாக, ஞானியாக, சித்தராக இருந்து வழிகாட்டியருளினார் இராமலிங்கர்.

தைப்பூசத் திருநாளில் வடலூரில் தாம் கட்டிய சித்தி வளாகத்தில் ஓர் அறைக்குள் சென்று கதவினை மூடிக்கொண்டு தாம் வரும்வரைக் கதவினைத் திறக்க வேண்டாம் என்று சொல்லி விட்டுச் சென்றார். (அந்நாள் 30-1-1874-ம் நாள் ஆகும். ஒளிவடிவாகத் தாம் வழிபட்ட அருட்பெருஞ்ஜோதியோடு ஒன்றுபட்டுப் பேரின்பப் பேறடைந்த நாள்) இராமலிங்கரது கட்டளையை ஏற்ற அவரது சீடர்களும் கதவைத் திறக்காது இருந்தனர். காலம் வெகுவாகக் கடந்து விட்டக் காரணத்தால் கதவினைத் திறந்தனர்.

ஆனால் அவ்வறையில் சீடர்கள் இராமலிங்கரைக் காணாது திகைத்தனர். பின் இராமலிங்கரும் தாம் விரும்பி வழிபட்ட ஜோதியில் ஜோதியாகக் கலந்துவிட்டமையை உணர்ந்து கொண்டனர். உலகத்தவருக்கும் இராமலிங்கரது முக்தி நிலையை அறிவித்தனர். இன்றும் அமைதியும், கருணையும் நிறைந்த சத்திய தரும ஞான சபையை காணலாம். நாமும் அமைதியைப் பெற்று அவர்தம் வழியில் சென்று காணக்கரிய அப்பேரின்பத்தைப் பெற்றிடலாம்.

********

## பிரதட்சிண விதிப் பலன்

நந்தியையும் பலிபீடத்தையும் சேர்த்தே பிரதட்சிணம் செய்ய வேண்டும். இவையில்லாத இடத்தில் பிரதட்சிணம் செய்வதில் பயனில்லை.

| | | |
|---|---|---|
| 3முறை | செய்வதால் | இஷ்ட சித்தி |
| 5முறை | செய்வதால் | ஜயம் |
| 7முறை | செய்வதால் | சற்குணங்கள் |
| 9முறை | செய்வதால் | புத்திர பிராப்தி |
| 11முறை | செய்வதால் | ஆயுள் விருத்தி |
| 13முறை | செய்வதால் | பிரார்த்தனை ஸித்தி |
| 15முறை | செய்வதால் | தனப் பிராப்தி |
| 17முறை | செய்வதால் | தனவிருத்தி |
| 108முறை | செய்வதால் | அஸ்வமேதயாகப் பலன் |
| 1008முறை | செய்வதால் | ஒரு வருட தீக்ஷையாகப் பலன் |
| 10000முறை | செய்வதால் | எல்லா சம்பத்துகளையும் அடையலாம். |

தொகுத்தவர்: அ.பெ. சீனிக்கரையாளர், புத்தூர்.



## வாசகர் கவனத்திற்கு....

தி.தி. தேவஸ்தான அச்சகத்தில் ஏற்பட்டுள்ள இயந்திரக் கோளாறு காரணமாக கடந்த சில மாதங்களாக ‘ஸப்தகிரி’ பத்திரிகையினைக் குறித்த நேரத்தில் வெளியிட முடியாதவாறு, காலம் தாழ்ந்து வெளிவந்துகொண்டிருக்கின்றது. இந்நிலை இன்னும் இரண்டு மாதங்களில் சீர்பட்டுவிடும். ஆகவே ஏற்பட்டுள்ள இந்நிலைக்கு வருந்துகிறோம்.

வாசகர்களின் முழு ஒத்துழைப்பினையும், ஆதரவினையும் நாடுகின்றோம்.

—ஆசிரியர்.

# ஈட்டின் உவமையில் அரசனும் அரசகுமாரனும்

செல்வி. சோ.கி. கல்யாணி - மதுரை.

திருவாய்மொழிக்கு ஆறு யிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறாயி ரப்படி என்னும் ஐந்து வியாக்கியானங்கள் உள்ளன. இவற்றுள் முப்பத்தாறாயிரப்படியை 'ஈடு' என்று கூறுவர். கவசமானது உடலைக் காத்தல் போன்று இந்த ஈடு, கற்போராலும் எழுதுவோராலும் வேற்றுமக்களாலும் தன் நிலை திரிந்து மாறுபடாதபடி திருவாய்மொழியினைக் காத்து நிற்றலின் இதற்கு 'ஈடு' என்று பெயர் வழங்கப்பட்டது. காத்தல் தொழிலுக்குரிய கடவுள் விஷ்ணு; அதே தொழிலைப் புரிபவன் அரசன். "திருவுடை மன்னரைக்காணில் திருமாலைக் கண்டேனே' என்ற ஆழ்வார் வாக்கிற்கேற்ப ஈட்டுரையாசிரியர் இப்பூவுலக மன்னனைக் கொண்டு, பரமபத மன்னனான எம்பெருமானின் தன்மையையும், மூவகையுயிர்களின் தன்மையையும் விளக்கியருளுகிறார்.

## இறைக்கும் உயிர்க்கும் இன்பம் தரும் உலகு

"அலகிலா விளையாட்டு உடையவர்" என்ற கம்பரது வாக்கிற்கேற்ப இறைவன் இவ்வுலகைப் படைப்பதில் இன்பம் கொள்கிறான். அதில் வாழ்வதில் மூவகை உயிர்களான நித்தர், பத்தர், முக்தர் மகிழ்கின்றனர். இதனை, "அரசர்கட்கு நாடு எங்கும் தமது ஆணை செல்லுமாயினும், தங்கள் தேவியரும் தாங்களுமாகப் பூந்தோட்டங்களை சிலவற்றைக் குடி நீர் வார்த்து ஆக்குவது அழிப்பதாய் விளையாட்டு இன்பம் துய்க்குமாறு போன்று" என்கிறது ஈடு.

## இறைவனின் சௌலப்யம்

எங்கும் நிறைந்திருப்பினும் இறைவன், பிற தேவர்க்கு ஆபத்துக்காலங்களில் தன் திருமேனியில் இடம் தருவான். எனவே ஆழ்வார்கள் இறைவனது திருமேனி அடைதலை விடார்கள் என்பதை, "சாமந்தர்கட்கு புறம்பே நாடுகள் மிகுதியாய் இருந்தாலும், மாளிகைக்குள்ளே செம்பாலே நாழி அரிசியைத் தங்களுக்கு மேன்மையாக நினைத்திருப்பார்கள் அன்றோ" என்கிறது ஈடு. இதனை நம்மாழ்வார் கருத்தாக, "செடி சீய்த்துக்குடி ஏற்றின படை வீடுகளை விடாதே இருக்கும் அரசர்களைப் போன்று" இறைவன் தன் மனத்தை விட்டு அகலவில்லை என்கிறது.

நம்மாழ்வாரை ஆட்கொள்ள இறைவன் எங்கும் நிறைந்தான் என்பதை, "ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளைவாரைப் போன்று தம்மை ஏற்றுக் கொள்ளுகைக்காக நிறைந்த படியைச் சொல்கிறார்" என்கிறது.

தனது திவ்யரூபத்தையும் திவ்யாயுதங்களையும் மறைத்துக்கொண்டு பூமியில் அவதாரம் செய்கிறான் இறைவன். சிலசமயம் இவ்வாயுதங்கள் வெளிததோன்றி, பல சமயம் தோற்றாதே நிற்கும். இதனை அரசர்கள் மாறுவேடம் பூண்டு நகரசோதனை செய்யச் செல்வதோடு உவமிக்கிறார் நம்பிள்ளை. "அரசர்கள் கறுப்பு உடுத்துப் புறப்பட்டால், விடியும் புகிற காலத்தில் முகங்காட்டுகைக்காக அந்தரங்கர் மறைந்து திரிவர்; அதுபோன்று தோற்றாதேயும் நிற்பார்கள்" என்பதே அவ்வுவமை.

## இறைவனின் திருநாமம்

"வாச்ய ப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவம்" என்பர் பெரியோர். திருநாமமே அவனடியார்க்கு அனைத்தையும் தரவல்லது என்பதை, "அரசபுத்திரன் போகா நின்றால், அரசனோடு சம்பந்தம் உடையார்க்கு எல்லாம் அங்கீகரிக்க வேண்டுமாறு போலே" என்கிறது ஈடு. மண் கொள்ள வேண்டி வாமனனாய் வந்தவனை, 'வாமனா' என்றழைத்தவர்கள், அவன் மூவடியால் தாவி உலகளந்த பின்னும் 'வாமனா' என்று அழைக்கின்றார்களே! இது, 'சூடின பின்பும் கருந்தரையில் பேர் சொல்லும் அந்தரங்கரைப் போல உள்ளதே' என்று வியக்கிறது ஈடு.

## இறைவனும் பிற தேவர்களும்

இறைவன் எல்லா உலகங்களிலும் தனக்குச் சரீரமாக இருக்கிற தேவதைகளை நிறுத்தி நிர்வாஹம் செய்தலை, 'இராஜாக்கள் ஊர்தோறும் கூறு செய்வார்களை வைக்குமாறு போன்று நிறுத்தி வைத்தான்" என்கிறது. "அரசன் தன்னுடையான் ஒருவனுக்கு ஒரு நாட்டைக் கொடுத்தால் அவனுடைய ஆணையும் ஆக்ஞையுமாக அவனுடைய சுவாதந்

திரியமே நடக்கும்படி செய்து கொடுக்குமாறு போலே" பரம்பொருளான இறைவன் - படைப்புத் தொழிலைப் பிரமனுக்குத் தந்தருளினான். "இராசாக்கள் அந்தப்புரத்தில் ஒரு கட்டினின்றும் மறைக்கட்டு ஏறப்போகாநிற்க, அந்தரங்கர் நடுவே முகம் காட்டித் தம் காரியம் கொண்டு போமாறு போலே" பிற தேவர்கள், நம்மாழ்வாரின் திருநெற்றியில் இருந்து திருமுடி ஏற நிற்கையில் இறைவனிடம் தம் காரியம் சாதித்துக்கொண்டு போகிறார்கள் என்கிறார் நம்பிள்ளை.

## இறைவனும் அடியார்களும்

இறைவன் உலகத்தார்க்கு கலி தோஷங்களைத் தந்தாலும் தன்னடியார்க்கு அவை வராது தடுப்பான். இதனை, "நாட்டுக்கு இட்ட அஃகம் (சட்டம்) அல்லவேயன்றே அந்தப்புரத்துக்கு இடுவது" என்கிறது ஈடு. பரமபதம் செல்லும் உயிர், ஆங்காங்கே தங்குவதற்குத் தேவர்கள் அழகிய இடங்களை அமைக்கின்றனர். இது மஹாநவமி உற்சவத்தின் போது அரண்மனை வாசல்களில் அரசர்கள் 'இது அழகிது' என்றொரு நிமிடம் பார்த்துச் செல்ல, செய்யப்பட்ட அலங்காரங்களைப் போல் உள்ளது என்பதை, "அரசர்கள் ஒரு கால் கண்டு சிரித்து அழகிது என்று போகைக்காக மாநாவி சமைப்பாரைப் போல" என்று கூறுகிறது.

## இறைவனும் ஆன்மாவும்

"அரசகுமாரனையும் வேடுவனையும் ஒருங்கு பிணைத்தாற் போன்று" மாயையானது உடலையும் ஆன்மாவையும் ஒருங்கு பிணைத்தது. அதனால், வேடர் கையிலே அகப்பட்டு வளர்ந்த அரசகுமாரன் தன்னை ஒரு வேடனாகவே எண்ணுதல் போல இவ்வுயிர் தனது உடலை 'நான்' என எண்ணுகிறது. இதனை, "இராஜ புத்திரன் வழியிலே போகாநிற்கச் செய்தே வேடர் கையிலே அகப்பட்டுத் தன்னை வேடனாகவே எண்ணுமாறு போலே" என்கிறது.

"இராச்சியத்தை இழந்த இராஜ புத்திரனை ஒருவனை இராச்சியத்திலே பிரவேசிப்பித்தால், இவனாலே நாம் இப்பேறு பெற்றோம் என்று அவன், அவனைக் கொண்டாடுமாறு போல" இறைத்தொண்டிற்காக உடல் இருந்தாலும் மனது அதனை நிறைவேற்றித் தந்ததால், மனதைப் பெரிதும் நம்மாழ்வார் கொண்டாடுகிறார் என்கிறது ஈடு. இவ்வாறு இறைவனை அறிந்த உயிரை, அவன் தன்னுடன் சேர்த்துக் கொண்டு பிறப்பை அறுப்பான் என்பதை, "அரசன் இல்லாத தேசத்திலே அரசபுத்திரன் தலையிலே முடியை வைத்து விலங்கு வெட்டி விடுமாறு போன்று" என்று விளக்குகிறது. சிலசமயம் இவ்வுயிர்க்கு முதலில் இறைவன் நித்யசூரித்தன்மை தந்து, பின் அதன் சம்சாரத்தைக் கெடுக்கிறான். இதனை, "இராஜகுமாரன் தலையிலே முடியை வைத்துப் பின்னை விலங்கு வெட்டி விடுமாறு போல" என்று விவரிக்கிறது. உயிர் உடம்புடன் ஒரு பேற்றைப் பெறுவதை விட, அதனை விட்டு நீங்கிய நிலையே சிறந்தது என்பதை, "அரசகுமாரன் அழுகு சிறையிலே கிடந்தால், முடிசூடி அரசை நடத்துவதிலும் சிறை விடுகை தானே பயனாக இருக்குமாறு போலே" என்று எடுத்துக்காட்டுகிறது ஈடு.

இவ்வாறு தான் இறைவனுக்கு அடிமை என்றும் தனது உடல் இறைத்தொண்டிற்கே என்றும் உணராத ஆன்மா புலன்களின் வழி தானும் சென்று அழிகிறது. இது அரசகுமாரன் தலையில் சும்மாடுடன் நின்றால், அவன் அரசகுமாரன் என்பதையறியாத வழி செல்வோர், அவனைச் சுமை தூக்கி வரப்பணித்தல் போன்றது என்பதை, "இராஜபுத்திரன் தலையில் முடியை வாங்கிச் சும்மாட்டைக் கொண்டு வழியிலே நின்றால், அடி அறியாதார் சுமை எடுத்துக் கொண்டு போமாறு

## உயிர் காத்த உபாயம்

இராவணன் கயிலாய மலையைப் பெயர்த்தபோது சிவபெருமானின் கால்பெருவிரலால் நசுக்குண்டான். வேதனையுற்று கதறியழுதான். (இராவணன் என்ற சொல்லுக்கே அழுகையுடையவன் என்று பொருளாகும்) கதறும் அக்குரல் கேட்டு கயிலாய மலையில் கடுந்தவமிருந்த வாகீச முனிவர் கண் விழித்தார். இராவணனுக்கு நேர்ந்துள்ள அபாயத்தை அறிந்தார். ஓர் உபாயத்தை புரிந்தார். "சிவன் சாம கானப் பிரியன், கானம் பொழிந்திடு. சிவன் மகிழ்ந்திடுவான்". இராவணன் சிவபக்தன். இசைப்பித்தன். வாகீசரின் அருள்மொழி அவன் செவியில் தேன் மொழியாய் ஒலித்தது. சாமகானம் இழைத்தான். உயிர் பிழைத்தான். மறுபிறவியின் வாகீசர் மருள்நீக்கியாராக (திருநாவுக்கரசர்) மண்ணுலகம் வந்தார். திருநாவுக்கரசர் பதிகந்தோறும் அன்று கண்ட அக்காட்சியினை இன்று கண்ட கோலமாய் நமக்குக் கூறுகிறார்.

திரு. ஆர். சுப்பாராவ் - சென்னை.

"போலாயிற்று" என்று உவமிக்கிறது ஈடு. இவவாறு புலன வழி செல்லாமல் இறைவழி சென்ற ஆன்மா வைகுந்தத்தை அடைதலை, "வேறு தேசத்திற்கு சென்றிருந்த அரசன் தன தேசத்திலே புகுமாறு போல" என்று சிறப்பிக்கிறது ஈடு. அங்கு தத்தமது வினைகளுக்கு ஏற்பத் துழாயாய், புளளாய், மரமாய் இருப்பதை, "அரசனுடைய சன்னிதியில் கூனர குறளர்களாய வசிப்பது போன்று" என்று விளக்குகிறது ஈடு.

அறிந்தன கொணடு அறியாதன காட்டும் வகையான் ஈட்டுரையாசிரியர் இவ்வுலக அரசனைக் கொண்டு அவ்வுலக அரசனைக் காட்டுகிறார். உயிர் இறைவனை ஒத்திருந்தாலும் (அரசனைப் போல அரசகுமாரன் இருந்தாலும்) இவ்வுடலை விட வேண்டும். (முடிசூட வேண்டும்) அதற்குத் திருநாமம் துணைபுரியும். அதன்படி அவனருள் பெற்றுப் பிறவியொழித்து நித்யசூரி தன்மை அடையலாம். அப்போது அவ்வுலக அரசனைப் போன்றே இன்புறலாம். அவனும் தன்னைச் சார்ந்தோர்க்கு அரசன் சலுகை செய்தாற்போல நம்மைத் துன்பங்களினின்றும் காப்பான்.

"மிக்கவிறைநிலையும் மெய்யா-
முயிர்நிலையும்
தக்கநெறியும் தடையாகித்-
தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும்
ஓதும் குருகையர்கோன்
யாழிசை வேதத்தியல்"

என்று பட்டர் அருளிச்செய்தவாறே திருவாய்மொழியும் அதன் ஈட்டுரையும் அமைந்து நம்மை மகிழ்விக்கின்றன.



# நின்பாதம் போற்றுவமே!

திரு. வெ. சுந்தரம் ஐயர் - பரமக்குடி.

தேவியவள் கொலுவிருப்பாள்
தேசமெல்லாம் காத்திருப்பாள்
காவியத்தில் இசைகானத்தில்
காணுகின்ற தாயாவாள்
தாவியவள் நடம்புரிவாள்
தருணமிது அருள்புரிவாள்
பூவிதழ்மேல் தானமர்ந்து
புன்னகையே புரிகின்றாள்.

அலைமகளாய் மலைமகளாய்
கலைமகளாய் தோன்றுகின்றாள்
அலையலையாய் துன்பங்கள்
அடுக்கடுக்காய் வந்தாலும்
விலையில்லா இன்பங்கள்
விரைந்துநமக் களித்திடுவாள்
நிலையான நல்வாழ்வு
நமக்களித்து இன்புறுவாள்

காற்றாக ஒளியாக
கவின்மிக்க ஒலியாக
தோற்றங்கள் பலவாக
ஏற்றமுறும் அவள் செயலே
சாற்றுமுயர் கவிதனிலே
சக்திமன மகிழ்வாளே
ஆற்றலெலாம் இப்புவியில்
அவள்தந்த செயலாமே!

மலர் மங்கை தூயமனத்தார்க்கு
மகிழ்வோடு வரமருள்வாள்
வலம் வந்து வணங்கிடவே
விழிக்கருணை பொழிந்திடுவாள்
நலம் நாடி நவநாளில்
நாயகியை வணங்கிடவே
நலமோங்கு நவநிதியும்
நல்லிசையும் நிறைப்பாளே!

பொன்னோடு பல்பொருளும்
புந்தியொடு தான் சிறக்க
என்னாளும் அன்னையவள்
எழிலெங்கும் நிறைக்க
மண்மீதில் பண்ணோடு
பக்திதனைப் பெருக்க
கண்ணொளியில் நன்மைகளே
தாயேநின்பாதம் போற்றுவமே!

பெண்மையின ஆட்சிதனில
பெருமைகள் மிகவுண்டு
கண்களையே காத்துவரும
இமையாகும் தாய நீயே!
உனனருளால் இவவுலக
உயர்வுகளே எமதாகும்
அன்னையே நினபாதம
அனுதினமும் போற்றுவமே!

இச்சா சக்தி கிரியா சக்தி
ஞானசக்தி என்பனவே
முச்சக்தி ஒன்றாக
முன்னேற்றத் துணையாகும்
சச்சரவுச் சண்டைகள்
சமயசாதிப் பூசல்கள்
இச்சகத்தில் இல்லாமல
இன்பமுறச் செய்வாயே!

கல்விக்குத் தாயானாய
கலைமகளாய் தோற்றமாகும்
நல்வீரமொடு விவேகம்
நிறைவாக்கும் மலைமகளே
வல்லதொழில் வளம்யாவும்
வழங்கும் அலைமகளே
சொல்மாலை சூட்டியுனை
சுந்தரமே போற்றுவனே!

காடுமலை கழனியெல்லாம்
கணக்கின்றி திருநிறைக்க
பீடுநடை போடுமுயர்
பெருமைமிக்க பாரதமே
கேடின்றி மாடுயர
பாடுபட வழிந்தந்து
கூடிவாழ கொலுவைத்து
கொண்டாடும் நவநாளே!

ஒன்பது நாள் கொலுவிருந்து
உயர்வுதனை காட்டுகின்றாய்
இன்பமுறு கலைகளையே
இவ்வுலகிற்கு அளித்தாயே
அன்பினிலே உலகமைதி
ஆக்கிவைக்கும் பெருநிதியே
மன்னுயிர்கள் மேன்மையுற
நின்பாதம் போற்றுவமே!

(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை.

## நம்மாழ்வார் விளக்கம்



### 13.4 உலகங்களை இயக்கும்வகை

380. கரணம் - ஞானத்திற்கான கரணங்கள், செயல்களுக்கான கைகள் கால்கள் போல்வன இவனது சக்தியில் ஒரு கூறு பெற்றிருப்பதால், அடியார்கள் தன்னை அடைவதற்குத் தானே கருவியானவன், தன்னை அடையும் ஸாதனங்களுள் தலையானவன்.

காட்டித் தன்கனைகழல்கள், கடுநரகம்
புகல் ஒழித்த......(10-6-11)

381. காரணம் - கரணங்களைக் கொடுத்து ஜீவர்களை உய்யச் செய்பவன்.

துன்னு கர சரணம் முதலாக எல்லா உறுப்பும்
உன்னு சுவை, ஒளி, ஊறு, ஒலி, நாற்றம்
முற்றும் நீயே (7-8-9)

382. கர்த்தா - தானே உலகாகி, உயிர்களாகி இவ்வாறு செய்விப்பவன்.

காரணம், கிரிசை, கருமம் இவை முதல்வன்
எந்தை (2-7-2)

[செயல்களுக்கான காரணம், செயல், விளைவு இவற்றிற்குக் காரணமானவன்.]

383. விகர்த்தா - தனக்காக இன்ப துன்பங்கள் இல்லாவிடினும், ஜீவர்கள் அனுபவிக்கும் இன்ப துன்பங்களைக் கொண்டு, தானும் இவற்றை அடைந்து வேறுபாடு கொள்பவன்

வியப்பாய், வென்றிகளாய், வினையாய்ப்
பயனாய்ப் பின்னும்நீ - துயக்காய் நின்றவாறு (7-8-6)

384. கஹந: - இவ்வாறான குணங்கள் நமது சிந்தைக்கு எட்டாதவாறு விளங்குவோன்.

ஊழிதோறூழி ஒருவனாக நன்கு உணர்வார்க்கும்
உணரலாகாச் சூழலுடைய (8-2-5)

[நன்கு உணர்வார்க்கும் ஒருவன் என்று, ஊழிதோறூழி உணரலாகா, சூழல் உடைய - தன்னை அடைந்தாரைத் தன்வசப்படுத்திக் கொள்ளும் திறமைஉடைய.]

385. குஹ: இவ்வாறு உலகங்கள் யாவையும் காப்பவன்.

காக்கும் இயல்பினன் கண்ணபெருமான் (2-2-9)

## 13.5 வானமண்டலத்தில் துருவமூர்த்தி

வ்யவஸாயோ வ்யவஸ்தாந:
 ஸம்ஸ் தாந: ஸ்தாநதோ த்ருவ: ।
பரர்த்தி: பரமஸ்பஷ்ட:
துஷ்ட: புஷ்டச் சுபேக்ஷண: ।। 42 ।।

386. வ்யவஸாய - ஆகாசம் முழுவதும (ஒளிச் சக்கரங்கள் எல்லாம) தன்னிடம் கட்டுப்பட்டிருப்பவன்.

விண்ணுமாய் விரியும் எம்பிரானையே (1-10-2)

387. வ்யவஸ்த்தாந: - கலை, முஹூர்த்தம் போன்ற காலப் பிரிவுகள் ஏற்படுவதற்குக் காரணமாக இருப்பவன். ஒளிமயமான தாரைகைகள் முதலியற்றைத் தன்னிடம் கட்டுப்படுத்துவோன்.

விளங்கு தாரகைகள் என்கோ? (3-4-2)

388. ஸம்ஸ்த்தாந: - யாவும் தன்னிடம முடிவுபெறுமாறு விளங்குவோன.

..........எல்லாரும் எவையும்
ஒக்க ஒடுங்க விழுங்கவல்லானை (3-10-9)

389. ஸ்தாநத: - உயர்ந்த பதவியை விரும்புவோர்க்கு அளிப்பவன். துருவனுக்கு அளித்தது குறிப்பு.

சேரும கொடைபுகழ் எல்லையிலானை (3-9-7)

[கொடையாலே சேரும் புகழ் எல்லை இல்லாதவனை.]

390. த்ருவ: - உத்தமமான ஸ்தானத்தைத் தருவதாலே, (சாதாரணமான) துருவனையும் சாச்வதமான நிலையுடையவனாகச் செய்தவன.

# 14. ராமனின் மேன்மை

திருமேனி அழகாலும் சிறந்து குணங்களாலும் ராமன் யாவராலும் விரும்பப்பெறுபவன. இவனது வரலாறு ம்ருத ஸஞ்ஜீவனம் (இறவாமற் காக்கவல்லது) என்றார் ஆசார்யரான பட்டர்.

## 14.1 குணங்கள், திருமேனி

391. பரர்த்தி: - திருக்கல்யாண குணங்களாலே பூர்ணமானவன். ஸௌலப்யத்தால் பரத்வமும் மறையுமபடி விளங்குவோன்.

கற்பார் இராம பிரானை யல்லால்
 மற்றும் கற்பரோ? (7-5-1)
தயரதற்கு மகன் (3-6-8)

[பரத்வத்தை மறந்து, தான் தசரதனுக்கு மகன் என்று சொல்லிக்கொண்டமை குறிப்பு.]

392. பரமஸ்பஷ்ட: - யாவரும் தன் மகிமையை வெளிப்படையாகக் காணுமாறு அவதரித்தவன்.

.....தென்பால் இலங்கை, வெங்களஞ்செய்த
விண்ணோர் பிரானார் (தி.விரு.77)

[ராவண வதத்திற்குப் பின் பிரமன் முதலானோர் இவனை 'நீ நாராயணனே' என்றது குறிப்பு.]

393. துஷ்ட: -(1) செய்யும் பரிபாலனத்தால், (2) பிறவியால் (தசரதனின் குமாரனாக) களிப்புடையவன்.

ஆண்டு, தன் சோதிபுக்க (7-6-9)

[ஆண்டு-அரசே தன் பெரும் செல்வம் என்று பரிபாலித்து..]

தயரதன் பெற்ற மரகத மணித்தடம் (10-1-8)

[பெற்ற என்பதால் ராமன் கொண்ட பெருமை குறிப்பு.]

394. புஷ்ட: - திருமேனி அழகாலும் குணங்களாலும் பரிபூர்ணன்.

காண் பெருந் தோற்றத்து என் காகுத்த
நம்பிக்கு (6-6-9)

[நம்பி - பூர்ணன்]

395. சுபேக்ஷண: - செல்வத்தாலும் வாத்ஸல்யத்தாலும் மங்களகரமான கண்ணோக்கு உடையவன்.

விட்டிலங்கு செஞ்சோதித் தாமரை பாதம்
கைகள் கண்கள் (2-7-5)
செந்தாமரைக்கண் (2-5-2)

ராமோ விராமோ விரதோ
மார்கோ நேயோநயோநய: ।
வீர: சக்திமதாம் ச்ரேஷ்டோ
தர்மோ தர்விதுத்தம: ॥ 43 ॥

396.ராம: ராமன்

காகுத்தா! கண்ணனே! தொண்டனேன்
கற்பகக் கனியே! (8-1-2)

397. விராம: அரசு துறந்து ஓய்வு பெற்றவன்.

398. விரத: - ராஜ்யம் போன்ற சுகம் எதிலும் ஆசையற்றிருப்பவன்.

398. விரஜோமார்க: - தூயதான நெறியைக் காட்டுவோன்.]

399. நேய: - தனது அன்பர்களால் நியமிக்கப்பெறுமாறு அடங்கியிருப்பவன்.

உகந்தே உன்னை உள்ளும் என்னுள்ளத்து
அகம்பால், அகத்தான் அமர்ந்தே இடம்
கொண்ட அமலா (9-4-7)

400. நய: - யாவரையும் நல்ல வழியில் செலுத்துவோன்.

சராசரம் முற்றவும், நற்பாலுக்கு உய்த்தனன்
(7-5-1)

[நற்பாலுக்கு - நல்ல இயல்புடையனவாக தன்னிடம் பேரன்பு கொள்ளுமாறு]

401. அநய: - பகைவரிடம் சிறிதேனும் இரக்கமில்லாதவன்.

கொம்புபோல சீதை பொருட்டு, இலங்கைநகர்
அம்பெரி உய்த்தவர் (4-2-8)

402. வீர: - எதிரிகள் அஞ்சும்படி செய்பவன்,

காயும் கடுஞ்சிலை என் காகுத்தன் (5-4-3)

403. சக்திமதாம் ச்ரேஷ்ட: -சக்திவாய்ந்த தேவர்களிலும் சிறந்தவன்.

ஆண்திறல் மீளி மொய்ம்பின் அரக்கன்
குலத்தைத் தடிந்து (7-6-9)

[ஆண் திறல்-ஆண்பிள்ளைத் தனம், மீளி மொய்ம்பின் - சிங்கம்போல் வலிமையுடைய (அரக்கன்)]

404. தர்ம: - தானே தர்மமானவன் (போக மோக்ஷங்களுக்குக் காரணமாகையால்)

405. தர்மவித் உத்தம: - தர்மம் அறிந்தோருள் சிறந்தவன்; தர்மம் அறிந்தோர் தன்னிடம் கேட்டு அறிந்து கொள்ளுமாறு பெருமைவாய்ந்தவன்.

(தொடரு

## சூரிய சித்தாந்தத்தில் காலம் நேரம்

பழங்காலத்தில் மணியை (நேரத்தை) கீழ்க் கண்டவாறு கணக்கிட்டு இருந்தார்கள்.

| | | |
|---|---|---|
| ஒருநாள் என்பது | - | 60 நாழிகைகள் (24 மணி) |
| ஒரு நாழிகை | - | 60 விநாழிகை |
| ஒரு விநாழிகை | - | 60 லிப்தம் |
| ஒரு லிப்தம் | - | 60 விலிப்தம் |
| ஒரு விலிப்தம் | - | 60 பரா |
| ஒரு பரா | - | 60 தத்பரா |

மேற்கண்டவாறு சூரிய சித்தாந்தத்தில் காலத்தைப் பிரித்திருந்தனர்.

திரு. N.C. கோபாலன் - சென்னை.





# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித இனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில காடுகள் ஆண்டாணடு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளிந்து வருவன காடுகளாகும.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேறகொண்டு பல்வேறு இனஙகளைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வளச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடவப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்குப் பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்

நன்கொடை ரூ. 15000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாலு (நினைவு மரங்கள்)

நன்கொடை ரூ.5000

இத்திட்டத்தின் கீழ் திருமலை - திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்

நன்கொடை : ரூ. 2000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேறபடி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517 501.

# செய்திச் சுருக்கம்

### ஸ்ரீபத்மாவதி பரிணயோத்ஸவம்

திருமலையில் 27-4-96 முதல் மூன்று நாட்களுக்கு ஸ்ரீபத்மாவதி பரிணயோத்ஸவம் எனும் கோயில் திருமண நிகழ்ச்சி வெகுச்சிறப்பாக நடைபெற்றது. முதல்நாளன்று திருமலைக்கோயில் உத்ஸவர் கஜவாகனத்திலும், ஸ்ரீதேவி பூதேவி யார்கள் தனித்தனியாக பல்லக்குகளிலும் எழுந்தருளச் செய்யப் பெற்று நாராயணகிரி தோட்டத்தில் வரவேற்கப்பட்டனர். பின்னர் இறைவனின் திருமண நிகழ்ச்சிக்குப்பிறகு, ஏழுமலையான் தனது உபய நாச்சிமார்களுடன் ஊஞ்சலில் எழுந்தருளி தரிசனம் தந்தருள, சங்கீர்த்தன சேவையும் நடைபெற்றது. அடுத்த இரண்டு நாட்களின் போது பலவேறு வாகனங்களில் உத்ஸவர் தன் துணைப் பெண் தெய்வங்களுடன் எழுந்தருளி சேவை சாதித்தார். இம்மூன்று நாட்கள் நிகழ்ச்சியின் போது 'கேரளா இசை' எனும் தோல் கருவிகளால் இசைக்கப்பட்ட இசை நிகழ்ச்சி பக்தர்களை வெகுவாகக் கவர்ந்தது.

* * *

### வசந்தோத்ஸவம்

திருமலையில் 31-3-96 முதல் மூன்று நாட்களுக்கு வருடாந்திர வசந்தோத்ஸவம் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. முதல் நாளன்று கோயில் உத்ஸவர் தங்கத் தேரில் கொலுவிருந்து வசந்த மண்டபத்திற்கு எழுந்தருளினார். அடுத்த இரண்டு நாட்களின்போது ஸ்ரீகோதண்டராம சுவாமி சீதா தேவியுடனும், ஸ்ரீகிருஷ்ணசுவாமி ஸ்ரீருக்மணி தேவியுடனும் வசந்த மண்டபத்திற்கு எழுந்தருளி சேவை சாதித்தனர். இம்மூன்று நாட்கள் நிகழ்ச்சிகளை திருமலையில ஏராளமான பக்தர்கள் கூடியிருந்து கண்டு களித்தனர்.

* * *

### திருமலையில்

ஆந்திர மாநில முதல்வர் திரு. என். சந்திரபாபு நாயுடு அவர்கள் திருமலைக்கு அண்மையில் வருகை புரிந்தபோது, அங்கு அவர் தி.தி.தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. என். ரமேஷ்குமார் அவர்களால் அரசு மரியாதைகளுடன் எதிர் கொள்ளப்பட்டார். பின்னர் தரிசனத்திற்குப் பிறகு கோயில் பிரஸாதங்கள் முதல்வர்க்கு தேவஸ்தானத்தின் சார்பில் அளிக்கப் பட்டது.

* * *

### வினாடிவினா போட்டி

திருமலைக்கோயில் வரலாறு, தினசரி பூஜைகள், திரு வாசகம் ஆகியவற்றில் தேவஸ்தான ஊழியர்கள் பெரிதும் ஆர்வம் கொள்ளும் வகையிலும், அவற்றைப்பற்றிய தகவல்களை தெரிந்துகொள்ளும் வகையிலும், தேவஸ்தான ஊழியர்களிடையே வினாடி வினா எனும் போட்டி நிகழ்ச்சி நடைபெற்றது.

தேர்ந்தெடுக்கப்பட்ட ஊழியர்களைக்கொண்ட நான்கு அணிகளில் 'ஸ்ரீகோவிந்தராஜ' அணி (திருப்பதி) முதல் பரிசும், ஸ்ரீநிவாச அணி (திருமலை) இரண்டாம் பரிசும், ஸ்ரீபத்மாவதி அணி (திருப்பதி) மூன்றும் பரிசும் பெற்றன.

* * *

### வருந்துகிறோம்

தி.தி. தேவஸ்தான அச்சக மேலாளராக சுமார் 20 ஆண்டுகள் பணிபுரிந்து, அண்மைக் காலமாக நீண்ட விடுப்பில் இருந்துவந்த திரு. எம். விஜய குமார் ரெட்டி அவர்கள் உடல்நலக்குறைவு காரணமாக ஹைதராபாத் அப்போலோ மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டு, 17-4-96 அன்று காலமானார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.



* * *



Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and

Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

